மண்ணும் கடலும் வீழ்ந்தவரை மறைத்திட
மனங்களோ, மறைந்தவரை தினம் நினைத்தழ
நினைவாய்போன சொந்தங்கள்
கனவாய் கலைந்த  விடுதலைப் போரட்டங்கள்.

வானும், மண்ணும், கடலும் அலையும் வாழும்வரை-
வீழ்ந்தாலும் எழுவோம்-
வெட்டிச் சாய்தாலும் திரும்ப முளைப்போம்
தோல்வி இலட்சியங்களுக்கில்லை
தோற்றவர் இலட்சியவாதிகளுமில்லை
நாளை நமதே
இம் மண்ணும் ஒரு நாள் எமதே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-05-2023

# முறிந்த பனை

***பகைமையைப் பகைமையினால் தணிக்க முடியாது***
***பகைமையை அன்பினாலேயே தணிக்கமுடியும்.***
***இதுதான் தொன்றுதொட்டு வருகிற தர்மமாகும்***

முறிந்த பனைகளும் சிதைந்த மனைகளும் யுத்தத்தின் கோரம் சொல்ல
எரியும் சிதைகளும், எழுப்பிடும் புதைகுழிகளும் பிரிவைச் சொல்ல
மழை போட்ட வெள்ளக்கோலம் இயற்கையின் துயரைச் சொல்ல
விழி பூத்த கண்ணீரும் மொழி பூத்த சோகமும் மனத்துயரைச் சொல்ல
வாடி நின்றார்-வாழ்ந்த மண்ணில் அகதிகளான வன்னி மக்கள்.

மனதிலோ சரணாகதியின் அபஸ்வரமில்லை
மா துயரின் அழுகையொலி இல்லை-வாழ்விலும்
சாவிலும் ஈழச் சுதந்திரமே தேசிய கீதமானது

எறிகணைகளின் கோரத்தாண்டவத்தில் குடிமனைகள் சாயும்
பல்குழல் பீரங்கிகளின் தீ மழையில் விளை நிலங்கள் தீப்பாயும்
குண்டு விச்சு விமானங்களின் கொலை வெறியில்
புள்ளிமான்களும் வெள்ளைப்புறாக்களும் ஒன்றாய் மாயும்.

யுத்தமிடும் இரத்தக்கோலம்
வன்னி மண்ணின் வாழ்வை கொன்றழிக்கும்
பேரினவாதிகளின் வெற்றிக்கோஷம்
சர்வதேச சமூகத்தின் நீதியைப் பழிக்கும்

இரணகளமான குருஷேத்திர பூமியில்
வேங்கைகளின் புதிய போர் வடிவங்கள்
ஏழ்கடலையும் மூழ்கடிக்கும்-சோகவெள்ளத்தில்
எதிர் நீச்சல்போடும் தமிழ் அகதிகள்.

எறிகணைத் தீயில் வெந்து வீழ்ந்திட்ட தேகமும்
குண்டு துளைத்து வித்துடலாய் சிதையுண்ட காயமும்
கந்தையாய் கிழிந்து மனித வெடி குண்டாய் சிதறிடும்
தியாகமும், விதியை முந்திய விடுதலைப் பயணத்தில்
தமிழ் ஈழ சிந்து பாடியே-மண்ணில் வீழும்.

எல்லாமிழந்து ஏழைகளானோம்
இதயத்தில் சோகத்தை சுமந்து வேதாந்திகளானோம்
கஞ்சிக்கும் , கூழுக்கும் கையேந்தி
கடல் கடந்து புகலிடம் தேடும் அகதிகளானோம்

சோகச் சிறையிருக்கும் அசோகவனச் சீதைகளும்
காலனோடு போராடும் சாவித்திரிகளும்
ஆயுத மாதவியிடம் மோகித்த கோவலனுக்காய் தவமிருக்கும்
அபலை கண்ணகிகளும்-கானகத்தே கைவிடப்பட்ட
தமயந்திகளும் ஒன்றாய்த் கண்ணீர்த் தவமிருக்க-யுத்தமோ
கலைமான்களை வேட்டையாடி-அன்னையர்
கன்னியரில் காமம் தணித்த கொடுமை

குடியிருப்பும் கோயிலும் -படையெடுப்பால் பாழ்பட
அடைமழையும் வெள்ளமும்-ஆழ்கவலையில் ஆழ்த்திட
விடையின்றி வீதிக்கு வந்தவர்-குடையாய் பனையோலையும்
குந்தியிருக்க முறிந்த பனையையும் தேடியலைந்தார்.

பசியும் பிணியும் நிழலாய்த் தொடர
பச்சிலம் குழந்தையும் பசியால் கதறிட
தாயின் முலையும் வற்றிய கொடுமை-தமிழன்
சுதந்திர உணர்வோ வற்றாத மேன்மை

எறிகணைகளும் பீரங்கிகளும் எழுப்பிடும் ஒலியை
இசையாய் இரசித்து-வன்னி விடுதலைக்காய்
கண்ணீரும் செந்நீரும் கலந்தோடும் கோர யுத்தத்தை
கலிங்கப்போரென நினைத்து மகிந்தாவின் யுத்தம்
மகா அசோகரின் யுத்த ஞானம் கிட்டாத அவலம்

கத்தும் கடலிலும் கடும் புயல் பூத்திட
கார்மேகமும் கடும் மழையாய் கரைந்து கண்ணீர் சிந்திட
கருவான் நிலவும் முகம் மறைத்து அமவாசை என்றிட
வித்துடல் தாங்கிய வீரமண்ணும் கருத்தரித்தது
ஒழிக ஆயுத வன்முறை என்ற அகிம்சையின் இசை
நலலோர் மனங்களில் ஒலித்தது

யுத்த நெருப்பில் குளிர் காய்ந்து-
ஈரமண்ணில் தலைசாய்த்து
இறப்பும் இழப்பும் நிழலாய்த் தொடர
எட்டுத் திக்கும் எமனோடு போராடும்
ஈழத்தமிழன் துயர் என்று தீருமோ-இறைவா?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.3.2023*

# முறிந்த பேனா

உயிரைத் துச்சமாய் மதித்து- யுத்த முனையிலும்
உண்மைக்குச் சான்று பகிர்ந்த ஊடகவியலாலர்களின்
பங்களிப்போ சத்திய யாத்திரை
நாளும் தீ மிதிப்பான வாழ்வோ தீர்த்த யாத்திரை

ஆயதவாதிகளின் அராஜகங்களுக்கு
மண்டியிட்டு தலை வணங்காத
"**வணங்கா முடிகளே**"-
சத்தியத்திற்கு சான்று பகிர்ந்து
உண்மைக்கே உரமான உத்தமர்களே
உங்களுக்கு எனது **கீதாஞ்சலி**

உங்கள் குரல் உண்மையை எதிரொலித்து
பொய்மையின் முகமூடிகளை கிழித்தபோதுதெல்லாம்-
ஆயுதவாதிகளின் அசுர வேள்விக்கு
நீங்கள் ஆகுதிகளான கொடுமை.

உண்மைக்கு உங்களை உரமாக்கிய வீரமும்
பொய்மையின் மாயக் குரூரங்களிலிருந்து-மானுடத்தை
சுத்திகரிக்கச் சிந்திய புனித இரத்தமும்
வானும் மண்ணும் உள்ளவரை வரலாற்றில் வாழும்

உண்மையின் புரட்சித் தீயை -உள்ளோடும்
உயிர்ச் சிவப்பை சிந்தி அணைத்திட்ட கோரம்
பாசிசப் பயங்கரவாதம்
ஈழ வரலாற்றறை மாசுபடுத்திய சர்வாதிகாரம்

உண்மையை மறுதலித்த ஆயுதவாதிகளோ கோழைகள்
உண்மைக்குச் சான்று பகிர்ந்த நீங்களோ
வீர மறவர்கள், தூசு படியாத கண்ணாடியாய்-
நிஜத்தை பிரதிபலித்த உங்கள் செய்தி

அராஜகத்தை, ஆயுத துஷ்பிரயோகத்தை
ஆயுதவாதிகளும்-ஆட்சியாளர்களும்
நியாயப்படுத்தியபோதெல்லாம்-
துப்பாக்கி நெஞ்சைக் குறி பார்க்க
நிமிர்ந்த நெஞ்சும் நேரிய பார்வையுமாய்
நெற்றிக் கண் காட்டினும்
குற்றம் குற்றமே என்ற நக்கீரன் பரம்பரை

சத்தியத்தின் குரல் வளையை நெரித்து-தம் மனச்சாட்சியை
கொலை செய்த ஆயதவாதிகளுக்கு புரட்சியாளர் விருதுகள்
ஒத்தூதும் தலையாட்டி பொம்மைகளோ அண்ணகர்கள்-
முதுகெலும்பிலாத கோழைகள்

முறிந்த பேனாக்கள் சிந்தும் மையும்
மாண்ட ஊடகவியலாளனின் உயிர்குருதியோடு
உண்மைக்குச் சாட்சியம் பகிரும்
வெற்றுப் பக்கங்களோடு வெளியாகும் பத்திரிகைகளும்
ஊடகத் துறையை தணிக்கை செய்யும்
அரசின் அடக்குமுறையை பழித்தே எடுத்துரைக்கும்

உயிர் பறிக்கும் ஆயுதத்திலும்-உண்மைக்குச்
சான்று பகிரும் எழுதுகோல் புனிதமானது
ஆயுதவாதியிலும் -சத்தியத்திற்கு சாட்சியமான
ஊடகவியலாளன் பணி புரட்சியானது

முறிந்த பனை யுத்தத்தின் கோரம் சொல்ல
மூடிய பேனா அராஜகத்திற்கு சாட்சியம் பகிர
படை, குடை, கோல் கொண்டு மண்ணாண்ட
மா மன்னரெல்லாம் முடிவில் மண்ணாகிட-
அன்பு, உண்மை, கருணையோடு
மனங்களை வென்ற மாமனிதர்கள்
இன்றும் வாழும் தெய்வங்கள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28.3.2023*

# நாடு-வீடு-காடு

---

பயணத்தின் முடிவு ஒன்றாயினும், பாதைகள் வேறு எனக்காட்டி நிற்கும்
மதங்கள் பிரிவினையின் சின்னமாக, சட்டமும், நீதியும் ஏட்டில் உறங்க
இன, மத, மொழி வெறி மனங்களை தீய்க்க, நடந்து முடிந்த
முப்பதாண்டுகால யுத்தம் கங்கையாய் ஓடிய மனித இரத்தம்.

இன மத, மொழி பேதமின்றி, குண்டுகள் உயிர்களைக் கொல்ல
தாய்குலம் கண்ணீர்த் தவமிருக்க, கடல் சூழ்ந்த தீவில்
கண்ணீர் சூழ வாழும் மானுடம், சுடுகாட்டுத் தீயை
எரியும் டயர்களில் ஊருக்குள் கொண்டு வந்த இராணுவம்.

மனிதப் புதைகுழிகளும், மாவீரர் துயிலுமிடங்களும் பாழ்பட
வீழ்ந்த இராணுவத்திற்கு அஞ்சலி செய்ய மணிமண்டபம் கட்டி
வெற்றித் திரு விழா எடுக்கும் தேசியம், "***நினைவேந்தல்***" நடத்த
தமிழருக்குத் தடைவிதிக்கும் ஆளும் பேரினவாதம்

கண்ணீர் தவமியற்றும் தாய்க்குலம், வறுமையோடு போராடும்
விதவையினம், விடியல் தேடும் அங்கவீனப் போராளிகளும்
புலம் பெயர்ந்த அகதிகளும்
நாதியற்ற அநாதைகளும் ஈழத் தமிழினம்

காடு மண்டிய ஊர்களும், கண்ணி வெடிக்காடாய் மாறிய கழனிகளும்
ஊனமுற்ற கால்நடைகளும், முறிந்த பனைகளும், சாய்ந்த தென்னைகளும்
மௌனராகம் பாடும் மீன்களும் ஓயாத சோகம் சொல்ல
விடுதலையின்றி சிறைகளில் வாடும் தமிழ் அரசியல் கைதிகள்

கண்களின் ஈரம் காயவில்லை, இதயத்தின் காயங்கள் ஆறவில்லை
உள்ளத்து அழுகுரல் ஓயவில்லை, இனவாதம் ஓயவில்லை
அழுவதற்கும், விளக்கேற்றுவதற்கும், நினைவேந்தலை
நடத்துவதற்கும், தமிழருக்கோ உரிமையில்லை

யாழில் பண்ணில்லை, பாடும் மீன்களும்
மௌனித்த நிலை, தாளம் மறந்த மேளங்கள்
சுருதி குலைந்த நாதஸ்வரங்கள்
அபஸ்ஸீரமான அவலங்கள்

மண்ணுக்குள் புதைந்து, கண்ணுக்குள் கசிந்து
நெஞ்சுக்குள் வாழும் சொந்தங்கள்
கனவாய் பழங்கதையாய் ஆனதே
நிம்மதி பொய்யாய், பழங்கதையாய் போனதே.

கனவுகள் மலருமுன் கருகிய மொட்டுக்கள்-
அந்தி சாயமுன் முந்தி உதிர்ந்த மலர்கள்-மண்ணிற்கு
உரமான சொந்தங்கள், மனதில் ஆறாத காயங்கள்
உதயம் காணாத வானம், இதய வீணையில் ஓயாத முகாரி ராகம்

எங்கள் கண்ணீரில் ஏழ் கடலின் உப்பு, எம் செந்நீரால்
இம் மண்ணும் சிவப்பு-ஆலா வட்டமிட்ட வானில
கழுகுகளின் ஆரவாரம்-அலைமோதும் கடலோரம்
அலை ஒதுங்கும் பிணங்களின் துர் நாற்றம்

உதிர்ந்து, புதைந்து மறைந்தவைக்காய்
அழுது நாளும் இதயம் சோகத்தை அடைகாக்க
தமிழ் ஈழம் கலைந்த கனவானது
வாழ்வோ, சோக அலைமோதும் கடலானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-8-2023

# நாளை நமதே

---

யார் சொன்னார்? தமிழ் ஈழம் எட்டாத இலட்சியமாய்
கைக்கு கிட்டாத நட்சத்திரமாய் மாறிட
முள்ளி வாய்காலில்-சிங்களம் நீர்குடமுடைத்து
தமிழ் ஈழத்துக்கு கொள்ளிவைத்ததென்று?

ஆயுதப்போராட்டம் தோற்றிட
உயிர்களும், உடமைகளும் அழிய,-அகதிகளாய்
ஈழத் தமிழினம் உலகலைய, உறவுச் சங்கிலி சிதைய-நண்பா
தமிழ் ஈழக் கனவு கலைந்தது உண்மை-ஆயினும் எம்
தமிழ் உணர்வுகள் அழியவில்லை-உள்ளத்தே
ஈழ விடுதலையின் கனல் அணையவில்லை

சிந்திய குருதியால் சிவந்த மண்ணும்
புதிய விதைப்பிற்கு இன்னமும் தயாரில்லை,
அறுப்புண்ட தாலிகளுக்கும்
அங்கவீன உறவுகளுக்கும், அநாதைகளுக்கும்
விடிவுகாலம் பிறக்கவில்லை

முறிந்த பனைகளும் முளைக்கவில்லை-அச்சுறுத்தும்
நிலக்கண்ணிகளும் ஆழ்துயில் கலைக்கவில்லை-
கிழக்கே பாடும் மீன்களுக்கோ உணவில்லை

ஓடும் கண்ணீரும்-அழிந்த உறவைச்
சுமக்கும் நெஞ்சங்களும்-மீண்டும் தழைக்க
காலம் இன்னும் கனியவில்லை-எம்
கண்ணீர் மழைக்காலம் ஓயவில்லை

காணமற்போனவர்களும் கண்படவில்லை
அரசியல் கைதிகளின் கைவிலங்குகளும் கழரவில்லை-
கண்ணீர் தவங்களுக்கு கடவுளும் இரங்கவில்லை
பாதை மாறிய பயணம் வீடு சேரவில்லை

நடந்து வந்த பாதையிலோ குருதிக்கறைகள் காயவில்லை
கண்ணீர் வெள்ளம் வடியவில்லை
திசைமாறிய போராட்டம் பயங்கரவாதம்-
அவப் பெயர் நீங்கவில்லை- புரிந்த கொடும்
பாவங்களுக்கு மன்னிப்பு கிட்டவில்லை

இதயத்திலோ-இமயச்சோகம்
இறக்கி வைக்கச் சுமைதாங்கியில்லை
தலை வைத்து உறங்க தாய்மடி இல்லை

தாய் மண்ணைச் சுற்றி கடலாய் இராணுவம்
கவலை சூழ்ந்த முகங்களிலோ கண்ணீர் பிரவாகம்.
திறந்த சிறையில் எம் வாழ்வு.

சிந்திய குருதியும் புரிந்த தியாகங்களும்-பலனின்றி
பொய்யாய் போனதே- ஐயகோ விழலுக்கு இறைத்த நீரானதோ?
விடியல் வெகு தொலைவிலில்லை
நம்பிக்கைதான் நம் சுதந்திரத்தின் எல்லை

நண்பா காத்திருப்போம்
ஈழக்கனவை நெஞ்சில் காத்து-விடுதலை
கனலை அணையாது வளர்த்து
நாளைக்காய் காத்திருப்போம்
நம் விடுதலைக்காய் விழித்திருப்போம்.

இரத்தம் சிந்தும் யுத்தம் வேண்டாம்
சமத்துவ சமதர்மச் சமுதாயம் மலர
ஒன்றே குலம்- அன்பே தெய்வம் தழைக்க
சத்தியமே பாதை-அகிம்சையே நம் தர்மம்

எல்லோரும் நலம் வாழ
இன மதம் கடந்த இன்ப உலகம் எம் நாடு
நாளை நமதே
ஒரு தாய் மக்கள் நாம் என்பதோ தேசிய கீதம்
இன, மத, மொழி கடந்த ஒற்றுமையே நம் வேதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-05-2023

# நாளை உனதே

---

முகில் கிழித்து, வான் உழுது குண்டு மழை பொழியும்
விமானங்கள், நீர் கிழித்துக், கடல் எரித்து, நிலம் நடுங்கத்
தீ மழை பொழியும் யுத்தக் கப்பல்கள்
உடல் துளைத்து, உயிர் அழித்துக் கொலைப் பசியாற்றும்
குண்டுகள் மண் அதிர, உடல் சிதற, இடியென விழுந்து
மரணக்குழி பறிக்கும் எறிகணைகள்

எரியும் மண்ணில் எங்கும் அங்கம் சிதறிய
உடலங்கள், ஒழுகும் குருதியோடு
எதிர் நீச்சல் போடும் போராளிகள்

யுத்த பூமியில் பிண வாடை நாறி வீசிட
செத்த உடலங்களை நாய்களும், நரிகளும் கூட
காக்கைகளும், கழுகுகளும் உண்டு களைத்திட
பசு மேய்ந்த பூமி தீ மேயக் கரியானதே

செம் மண்ணும் கொதித்துத் தணல் பூக்க
நீலவானும் புகையால் முகம் கறுக்க
காலனின் கோரத் தாண்டவத்தால்
எங்கள் தாயகம் எரியும் சுடலையானது

எங்கள் காலம் போராடிக் கழிய-தமிழ்
ஈழக் கனவு கொடுந் துயரரோடு முடிய
உலகெங்கும் அகதியாய் எம் இனம் அலைய
என் மகனே நான் மடிகின்றேன்

வீழ்ந்த தாயகம் வீறுகொண்டெழ-நாளைய விடியலில்
நம்மவர் புதிய சுதந்திரம் கொண்டாடிட
மறவாதே மகனே உன் கடமையை

முயற்சிகள் ஓயும்வரை தோல்விகள் நமக்கில்லை
விழுவதெல்லாம் எழுவதற்கே-மடிவதெல்லாம் முளைப்பதற்கே
நம்பிக்கையைத் தளரவிடாதே என் மகனே
நாளை உனதே! நம் தாயகம் என்றும் நமதே!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-1-6.2023*

# நம் நாடு

இனத் தீயில் வெந்த தேசம், மதம், இனம் கடந்து
மண்ணைச் சிவப்பாக்கி-நெஞ்சை கனலாக்கி
சோகம் யாவருக்கும் சொந்தமாக
மூவினமும் ஆறாய்ச் சிந்திய இரத்தம்

அநாதை, விதவை, அங்கவீனராய் மானுடம் சிதைய
வீடும், ஊரும் தீப்பிடிக்க வெற்றி தேல்வி ஊசலாட
ஓசையின்றி அலைபாயும் கண்ணீர்
இசையின்றித் தொடரும் அழுகை

சக்கர நாற்காலிகளில், வெள்ளைப் பிரம்புகளில்
ஊன்று கோல்களில், ஜெயப்பூர் கால்களில்
ஊனமுற்ற இளைஞர் வாழ்வு ஒடுங்கிட-கடவுளிடம்
தஞ்சம் கோரும் கைமை.

வறுமை, இருண்ட யுகத்தின் புதிய உறவாக
வாழ்வு கல்வாரிப் பாதையாக
நிகழ்காலம் நரகாகும்-நடைப்பிணமாய்
மானுடம் உருவழியும்.

நிலவில்ல வானாய், மலரில்லா வனமாய், நீரில்லாச்
சுனையாய், வாழ்வு நாறிட
இனவாதம் பேசி நாடாளுமன்றம் கூடும்.
ஈழத்தமிழன் ஒற்றுமை பகல் கனவாகும்.

அன்பு துறந்து, ஆயுதம் தாங்கிய துறவு-
அழிவுக்கு வழிவகுத்த கொடு நிகழ்வு
நீதி, சமத்துவம் பகல் கனவு
இனவாத அரசியலோ நிஜமான நிகழ்வு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-10-8-2023

# நம் தேசம்

விண்ணில் பறந்த யுத்த விமானங்களின் குண்டு மழையால்
மனைகளும் மாடங்களும் இடிந்து வீழ்ந்திட-நெஞ்சிலே காங்கை
மாண்ட உடலங்களில் பொங்கிடும் குருதிக் கங்கை

நாய் ஒன்று வாலை நிமிர்த்தி காலை உயர்த்தி
சிறுநீர் கழித்தபின்-வாசைன முகரக் காற்றைக் கசக்கிட
தென்றலில் வந்தது கருகும் தேகத்தின் வாசம்
தேமதுரத் தமிழன் தீக்குளிக்கும் கொடூரம்

தீய்ந்து கனிந்த டயர்களில் தீயாகிப், புகையாகி
தமிழ் கன்னியரும் காளையரும் வானேகிட
கண்ணீரில் மூழ்கி சோகத்தில் கரையும்
பிள்ளைச் செல்வத்தை இழந்த பெற்றோர்

நீல வானிற்கு புதுவண்ணம் பூசிட வான் எழுந்த கோரக் கரும்புகை
காய்ந்த மண்ணை ஈரமாக்கிட குருதி சிந்தி மகிழ்ந்தது கொடும்பகை
வானுயர்ந்த கோபுரங்களை-குண்டுகள் வாட்டி வீழ்த்திடக்-யுத்தக்
கப்பலைப் புரட்டி சுனாமியை வியக்க வைத்த கடற்கண்ணி

வடகிழக்கின் சுதந்திர நெருப்பு தென்னிலங்கையைத்
தீய்த்திட-கண்ணீரில் உருவழியும் தாய்கள்
காட்டிலே உலாவரும் விடுதலைப் புலிகளாய்ச் சேய்கள்

ஓயாத அசுரர் தொல்லையிலும்- தம்மை ஆகுதியாக்கி
சுதந்திர யாகம் செய்திடும் தமிழ் முனிகள்
சோகப் புயலிலும் கண்ணீர்க் கங்கைகளால்
கடவுளைப் பூஜித்திடும் தமிழ் சிங்களத் தாய்கள்

நெல் மணியும், முத்தும் இரத்தினமும் விளையும் பூமியில்
முகமில்லா முண்டங்களும், தீயுண்ட சடலங்களும்
தேசமோ யுத்தவாடையால் நாறிட-வீசு தென்றலும்
தீய்ந்து மணந்தது தேசம் எரிந்ததனால்-தெள்ளிய
நீரோடைகளும் நாறின-வெந்து மிதந்த பிணங்களினால்

வாங்கும், பிரித்தும், பஜனைகளும், பூஜைகளும்
ஒலித்திடும் பூமி.-குண்டு சப்தங்களினால்
யுத்த பூமியானதென்ன? ஒப்பாரிகளினால்
நாளும் இழவு வீடாவதென்ன?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**

*Pax Ravichandra-2-4-2023*

# நான்காம் வர்ணம்

---

பூகம்பத்தின் வித்துக்களாய் கண்ணி வெடிகளை விதைத்து
கடற்கண்ணிகளால் -கத்தும் கடலுக்கும் தீ மூட்டி
நடமாடும் வெடிகுண்டுகளாய்- குமுறும் எரிமலைகளாய்
சிங்களத்தை நடுநடுங்க வைத்த கரும்புலிகள்

விட மாலை சூடி-களமாடி, வான் படை கொண்டு போராடி
கத்தும் கடலேழும்-கண்டம் ஐந்தும் கேட்டிட
**புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்**
கர்ச்சித்த தமிழ் ஈழ விடுதலைப்புலிகள்

வல்லரசுக்கும் வணங்காமுடியாய்
வளர்த்த தேசத்துக்கும் அடங்காத் தமிழனாய்
வாழ்ந்த வேங்கைகள் வரலாறு- காலத்தால் அழியாது

கொட்டும் தீ மழையில் விளையாடி
கொல்லும் எரிமலைக் குழம்பில் நீராடி
தீய்ந்த வித்துடல் சாம்பலை நீறாக்கி
யுத்த பூமியில் ருத்திர தாண்டவமாடிய சிவசக்தி

புலிகளை வீழ்த்திட -செங்கோட்டையில்
சகுனியின் புதிய சூதாட்டங்கள்.
சாணக்கியனின் இராஜதந்திரங்கள்
ஈழ எட்டப்பர்களின் காட்டிக்கொடுப்புகள்

மூழ்கடித்த ஆயுதகப்பல்களின் -பின்னால்
மூவர்ணகொடியின் பளபளப்பு
பல்குழல் பீரங்கிகள் மூட்டிடும் கொடுந்தீக்கு
பாகிஸ்தானின் ஓயாத பங்களிப்பு

சிங்களச் சிங்கம் வாளைத் தீட்டிட-அசோகச் சக்கரம்,
சீவர ஆடை பேரினவாதத்தை மூட்டிட தம்மச் சக்கரம்
காட்டிக் கொடுத்த கருணாவோ எட்டப்பன்-
வணங்கா முடியாய் களத்தில் வீழ்ந்த கட்டப்பொம்மன்

வாலியை வதைத்த இராம நீதி-வீர அபிமன்யுவைக்
கொன்ற துஷ்டரோ கௌரவ ஜாதி-துரோணரை வீழ்த்த
தருமன் சொன்ன வார்த்தையோ அநீதி

தமிழர் தாயகம் தீப்பற்றி எரிந்திட
புதிய தீபாவளிக் கொண்டாட்டங்கள்
அசோகச் சக்கரத்திலோ குருதிக் கறை
தமிழ் அன்னை முகத்திலோ கண்ணீர்க் கறை

பிரித்தின் பல்லவிக்குள் அனுபல்லவியாய்
காவிகளின் யுத்த கோஷங்கள்
அகிம்சைப் புரட்சியின் அஸ்தமனச் சிவப்பாய்-
அப்பாவித்த தமிழரின் இரத்தங்கள்

பேரினவாத அரசுக்குச்-சாமரம் வீசும் காந்திய வாரிசு-
தமிழீழ விடுதலைப் புலிகளோ-கட்டபொம்மன்
பகத்சிங்-சுகதேவ்- ராஜகுரு வரிசையின் புதிய வாரிசு

குருதிச் சேற்றில் புதைந்த அசோகசக்கரம்
மூவர்ணகொடியிலும் நான்காம் வர்ணமாய்
ஈழ மறவர் சிந்திடும் இரத்தம்-
இந்திய இராஜதந்திரம் வழிநடத்திய யுத்தம்

ஈழ அன்னையை அம்மணமாக்கும் கௌரவ,
செங்கோட்டை மன்னர் உறவோ அரசியல் விபச்சாரம்
தமிழக அரசியலோ வெற்று வியாபாரம்

பழுதானதோ காந்தியின் இராட்டினம் -இல்லை
அம்மை சோனியா காந்தியிடம் அடைமானப் பொருளானதோ?
பாஞ்சாலிக்குச் சேலை கொடுத்த புராண அவதாரம்
கதர் சேலைதானும் கொடுக்க மனமிரங்காத இந்திய அரசாங்கம்

கர்ணனை வீழ்த்த குந்திக்கும், பார்த்தனுக்கும்,
இந்திரனுக்கும் இந்திய நாராயணனின் கீதை
நம்பிய தமிழன் நெஞ்சில் பாய்ந்த கணையில்
இந்தியாவின் சாணக்கியமோ இழிந்த பாதை

அன்னையர் சூடிய விழுப்புண்ணோ ஆறாத காயம்
அழகு மங்கையர் சூடிய விழுப்புண்ணோ மறையாத ஆகாயம்
அறுந்த தாலிகளும், கலைந்த திலகமும் கைமைக்கோலம்
இந்திய சாணக்கியத்தில் சத்தியத்தின் ஏழ்மைக்கோலம்
***ஹே ராம்-யா அல்லா-புத்த சரணாய்***

***சப்வே தத்தா பவங்க துதி தத்தா***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra - 28.3.2023

# எரி நரகம்

குடும்பிமலைக் காட்டில்-அஞ்சி நடுங்கி,
ஒடுங்கி வாழும் உயிரினங்கள்-கதவும்
காவலருமில்லாக் கோட்டையை கண்ணுறங்காது
காவல் காத்திடும் நிலக்கண்ணி, பொறி வெடிகள்.

உலவும் பேய்களும், ஊரும் மலைப்பாம்புகளும்
ஊனொடுங்க, உயிரொடுங்க விலகி நடந்திட,
மறந்து உள் நுழைந்த உயிர்களை-மாலையிட்டு
மரணம் வரவேற்றிடும் மயான பூமியிது.

சூரியனும் பயந்தே மெல்லத் தலை நீட்டும்
பாயும் குரங்கும் குரல் எழுப்ப அஞ்சும்-காயும்
நிலவும்  காணும் “காட்சியால்” மெலிந்து வாடும்
ஊளையிட்டு நரிகள் சோகம் சொல்லும்

கோட்டானும், கூகைகளும் குடி புகுந்திட
பாம்புகளும், விஷ ஜந்துக்களும் பல்கிப்பெருகிட
ஆவியை உறையச் செய்யும் அச்சத்தின் ஆட்சி

அச்சம் ஆளும் அடவியில்
அஞ்சாத வேங்கைகளின் படைவீடு
பார்க்கப் பயங்கரமாய்க் காட்சியளிக்கும்
சிறைக் கூடம்- ஒரு எரி நரகம்.

மலசல வாடை வயிற்றைக் குமட்டிட-சுவர்கள்
சொல்லும் குருதிக் கதைகள் கண்ணீரை வரவழைத்திட
நிமிர்ந்து நிற்கவும், முடங்கித் தூங்கவுமானஅறைக்குள்
அடங்கிப்போன ஆயிரமாயிரம் உயிர்கள்.

கூண்டுக்கு வெளியே, சிமெந்துத் தரையில்
இரும்பு வளையங்கள்-அதில் பிணையுண்ட
விலங்குகளாய் புலம்பிக் கிடக்கும் கைதிகள்

வதையால் எழுந்திடும் ஓலம் வானைத் தொட்டிட
கிளையில் குந்திக் கிடந்த மந்திகள் அஞ்சி நடுங்கிக்
கொப்பிழக்க பாயும்-இரைதேடி அலையும் மலைப்பாம்பும்
உடல் ஒடுக்கி குழிகளில் பயந்து பதுங்கும்.
குளிர் காய்ந்த முதலையும், கரை துறந்து
குளத்தில் தலை மறைக்கும்

பூட்டிய இரும்புத் தளைகள் “அசைவை” நிறுத்திட,
வதையால் சிந்திய குருதியும், சிறுநீரும், தரையிலும்,
சுவரிலும் கோலங்கள் போட்டிட-பிண வாடைவீசும்
அறைகளுக்குள் நடைப்பிணங்களாய்க் கைதிகள்.

இன்றோ, நாளையோ பேயுண்ண, நரியுண்ண
முதலைகள், காட்டுப்பன்றிகள் உண்டிட
விருந்தாய் இவர் பிணங்கள்.

முட்கம்பிச் சிறையில் முடங்கிட்ட கைதி,
நின்று வாழ்ந்து, நின்று தூங்கி, நின்று கழித்து,
நின்று மாண்டார் நினைவில் வஞ்சம் பெருக
நின்று போகும் மூச்சிலும் சாபம் நிலைக்க

கண்கள் பிடுங்கி ஒளியிழக்க, கைகால்களும்
நகமிழந்து களையிழக்க-கனலிடை வாட்டி,
நீரில் மூழ்கடித்து நினைவிழக்க வதைகள்.

மனித உரிமைகளை மறுதலித்த
போராளிகளும்-பயங்கரவாதிகளே!,
விடுதலைப் போராட்டத்தில் சிறைப்பட்டு.
சிறுமையுற்றதும் தமிழினமே

இரத்தம் கேட்கும் யுத்தத்தில்-ஓயாத
அன்னை விதைவைகளின் அழுகைச் சத்தம்
கண்ணீரிலும், குருதியிலும் கழிகின்ற வாழ்வில்
கையளவு மனதுக்குள் கடலளவு சோகம்
என்னே கொடுமை ! விடுதலையின் இயக்கமோ
பயங்கரவாதத்தின் இலக்கணமான சிறுமை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-05-05-23*

# நத்தார்

---

நிலவும் முகம் வெளுத்தது- நித்தம் இருளில் நிகழும் கொடுமைகளினால்,
நிலமும் முகம் சிவந்தது-நித்தம் மனிதர் சிந்தும் குருதியினால்,
வானும் உடல் கருத்தது வந்து சேரும் உயிர்ப் புகையினால்,
காற்றும் கருகி மணந்தது-டயர்களில் எரியும் பிணங்களினால்

இருண்ட எங்கள் வானில்- எந்த
நம்பிக்கை நட்சத்திரமுமில்லை-மந்தைகளாய்
குழுமிகிடக்கும் அகதிகளைத் தேற்றிட
வானதுாதர்களின் நற்செய்தியில்லை

பிரிவிலும், பசியிலும், நோயிலும் பிறக்கும் ஓலங்களில்
அமைதியின் செய்தியில்லை-கருகும் டயர்களில்
உறவுகள் எரிந்திட-ஏரோதின் ஆட்சி மாறவில்லை

விழிக்குளங்கள் வற்றி நீரிழந்து ஒளியிழக்க
உடற்கலங்கள் வாடி உதிரமிழந்து காய
சுமைதாங்கி இல்லாத-இதயங்களில் இமயச் சோகம்
இடி தாங்கி இல்லாத இல்லங்களில்-பிள்ளைகளுக்காய்
ஒப்பாரி வைத்துப் புலம்பும் தாய்களின் ஓலம்

ஏரோதின் ஆட்சியிலே ஈழம்
இராக்கேலின் இதயத்திலோ தீராத சோகம்
ஈரமில்லாத இதயங்கள் “இயேசுவின் பிறப்பிற்கு”
இன்றும் இடமில்லை என சொல்லிடும் காலம்

ஏரோது, பாரோ குருதி பூசி மகிழும்
கோலிப் பண்டிகையோ யுத்தம்-நல் இதயங்களில்
அமைதி பிறந்திட இதுவே சகுணம்
இறைவா சரணம்- அதுவே மந்திரம்

சோகம் கவ்விய பெத்லேகம் தாய்களுக்கு
கண்ணீர்ப் பண்டிகையோ ஒரு நாள்
சோகத் தீயில் எரியும் -ஈழத் தாய்களுக்கு
குருதிப் பண்டிகையோ வாழ்நாள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-2-4-2023*

# நாட்டு நடப்பு

“வீட்டைக்” காட்டி வாக்கு மூட்டை திருடிய “சூரர்கள்”
வென்றபின் ‘வீட்டிற்குத்” திரும்பாமல்
வெளிநாடுகளில் விருந்தினராயக் கூடாரமிட்டு
தமிழ் விடுதலை கீதம் பாடிடும் நாடோடி வேடதாரிகள்
புலி வேஷம்போட்ட புதிய கூத்தாடிகள்
ஈழத் தமிழினத்தின் இழிந்த தலைவர்கள்.

அன்று “கூண்டுக்குள் சுதந்திர கீதம் பாடிய”
குட்டிமணி-ஜெகன்-கோகிலங்கள்
கொலையுண்டு கைலாசம் போயிட-இன்று
காட்டுக்குள் குடியிருந்த எட்டப்பர்கள்
காட்டிக் கொடுத்தே கோட்டையில்
அமைச்சர்களான கேவலங்கள்
ஈழவரலாற்றின் இழிந்த யதார்த்தங்கள்

## தோட்டா

அஞ்சாத நெஞ்சுக்குள்ஆயிரம் துளையிட்டு
சுதந்திர கனலைத் தேடிக் களைத்த தோட்டாக்களும்
வணங்கா மண்ணையும் வங்காள விரிகுடாவையும்
தீய்த்து தேடிக் களைத்த குண்டுகளும்
புரட்சியின் சிவப்பைப் பூசி-சுதந்திர நெருப்பைச் சூடி
வித்துடலுக்குள்ளும், விளைநிலத்துள்ளும்
முக்தியடைந்து மௌனித்தனவோ?

## தமிழ்ச் செல்வன்

புன்னகைப் பூவினை புயலழித்த கொடுமையின்று,
தமிழ் அன்னையின் புதல்வனை- சிங்களம்
பலிகொண்ட நாளின்று
கண்களெல்லாம் கண்ணீர் மூழ்கிட
அழுகையும் ஓப்பாரியும் ஈழத்தை அதிரவைத்த நாளின்று.

இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
Pax Ravichandra-31.3.2023

# நீறு

---

வான் கறுக்கப் புகை உமிழ்ந்து
செம்மஞ்சளாய்ச் சினந்து எழுந்து எரிந்து
கோரத் தாண்டவமாடிப் பசி தணித்த அக்கினி
அணைந்து அமைதி கொண்டு புகைய,
தணல் பூத்த தரையில் தீயுண்டு சாம்பலாய் மாறிய
உடலத்தில் இராணுவத்தின் கோபாக்கினி

சிங்கள அடக்கு முறையின் கறுப்பு, நெஞ்சை எரிக்க-
விழி நீர் துளிர்க்க, நீறு பூசிய நெஞ்சில் எரியும்
அணையாக் கனலின் சிவப்பு

நாளைய விடியலுக்காய் தொடரும் ஈழவர் தியாகம்
நாளும் எரியும் டயர்களில் தொடரும்-
சிங்கள இனவாத யாகம்

முப்பதாண்டு கால யுத்தம், இனவழிவில் முடிய
காணாமல் ஆக்கப்பட்டவருக்கும், காணிக்கும்,
கண்ணீர்த் தவமிருக்கும் தாய்க் குலம்
ஒற்றுமையின்றிப் பிளவு பட்ட ஈழத்தமிழினம்

கனவாய் போன தமிழ் ஈழம்
கானல் நீராய் மாறும் ஒற்றுமையின் நாதம்
நாறிப்போன பிரிவினை வாதம்
எரிநரகான பேரினவாதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-6.2023

# நெஞ்சம் மறப்பதில்லை

---

இறுதிக்கட்ட யுத்தத்தில் -ஈமக்கிரியை இன்றி மடிந்தவரை,
மறைந்தவரை நினைந்து அழுது நெஞ்சம் அமைதி காண
ஈகைச் சுடரேற்றி நினைவேந்தல் எடுக்கத் தடை என்றார், சட்டத்தின்
துணை கொண்ட சர்வாதிகாரப் பேரினவாத ஆட்சியாளர்

இனம் கடந்த சோகம் எல்லோருக்கும் சொந்தமாக
கண்ணீரும், கனத்த நெஞ்சமும் யாவருக்கும் ஒன்றாக
வீழ்ந்தவர்களுக்கான நினைவேந்தலை மறுத்தல் நீதியோ?
மடிந்தவரை நினைந்தழ தடையோ? நீதியும் துணையோ

ஒடுக்கப்பட்ட இனத்தின் எழுச்சி வரலாறு,
மறக்கப்படல் வேண்டும் என்பது நீதியோ? வீரனுக்கு
மரணமில்லை, கோழைகளுக்கு நாளும் மரணம் நிஜமானதே,
ஈழவர் போராட்டம் ஓயாத அலையானதே

சிங்களம் யுத்த வெற்றியைக் கொண்டாட,
ஈழவர் மடிந்தவருக்கும், மறைக்கப்பட்டவருக்கும்
நினைவேந்தல் இன்றி நொந்தழ, நாதியற்ற இனமோ நாம்,
நம்மவர் மறைவுக்கு அழுது புலம்பல் இனவாதக் குற்றமோ?

முப்படையும், யுத்ததாங்கிகளும் அணிவகுத்துச் செல்ல
துர்ப்பாக்கிய உறவுகள் வீழ்ந்தவர்க்காய் கண்ணீர் சிந்த-
ஆண்டுதோறும்-விடுதலைப் புலிகளை வெற்றி கொண்ட நாளை
பெருவிழாவாய்க் கொண்டாடுகின்ற பேரினவாத அரசு

முள்ளிவாய்க்கால் அவலம்-நெஞ்சில் நெருஞ்சி முள்ளாய்க் குத்த
பள்ளி கொண்ட சொந்தங்கள், நடுகல் இன்றி நாதியற்ற
அநாதைகளாய் எங்கோ மறைந்து கிடக்க-புதைத்தாரோ?
இல்லை எரித்தாரே புலம்பி தவிக்கும் தாய் மனம்

சொந்தங்கள் கூடி வந்து சோகம் சொல்லியழத் தடை என்றார
வீழ்ந்தவர்க்காய்-விளக்கேற்றி, கூடிப் பிரார்த்திக்கத் தடை என்றார்
வதையுண்டு மடிந்தவர்க்காய்-நித்தம் நெஞ்சம் பதறித் துடித்திட
ஆறுதலின்றி தனிமையில் அழுது புலம்பும் சொந்தம்
மண்ணுக்குள். ஈழ மண்ணிற்காய் மறைந்த வீர பந்தம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.3.2023*

# நெருப்பு

---

குண்டுகள் மூட்டிய தீ -ஏழைக் குடிசையிலே
கொண்டவனைக் கொன்ற-தீ மங்கை நெஞ்சினிலே
அஞ்சுகமே பைங்கிளியே எனக் கொஞ்சி மகிழ்ந்த
மழலைகளை எரித்த தீ அன்னை அடிவயிற்றினிலே-
ஆயுதவாதிகளோ என்றும் தீ அணையா எரி நரகினிலே

குண்டுகள் மூட்டிய தீ குடியிருப்பை அழிக்கும்
கழனியையும், கால்நடையையும் சிதைக்கும்
சிப்பாய்கள் மூட்டிய தீ தாலியை அறுக்கும்
கற்பைச் சிதைக்கும் -கண்ணகி மூட்டிய தீ-
அம்மையை எரித்து, பெண்மையைக் காக்கும்

இனவாதம் மூட்டிய தீ ஈழத்திலே
கொடிய பயங்கரவாதம் மூட்டிய தீ உலகத்திலே
மதவாதம் மூட்டிய தீ மதப்பயங்கரவாதத்திலே
அவதார புருஷர்கள் மூட்டிய அன்புத் தீ
எங்கே? மானுடா எங்கே?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-2-4-2023

# நிலக்கண்ணி

மிதி வெடிகள் பறித்த கால்களுக்கு,
தலைவிதியை நோதல் முறையோ?-பொறிவெடிகள்
உருக்குலைத்த கால்களுக்கு-ஜெய்பூர் கால்களும்-
ஊன்று கோல்களும் போதுமென்பது சரியோ?

பொங்கும் ஆனந்தம் மறைந்திட, அங்கம் பறித்து,
அழகுடலைச் சிதைக்கும் உறக்கம் துறந்த
படைக்கலம் நிலக்கண்ணி, மண்ணில் மறைந்திருந்து
மானுடத்தை சிதைக்கும் உயிர்க்கொல்லி

மண்ணுக்குள் புதைந்து மானிடரைத் தீண்டிடும்
நச்சரவமோ, நாகாஸ்திரமோ நிலக்கண்ணி
கண்ணுக்கு மறைந்து அங்கம் தறித்து
உயிர் பறிக்கும் அரக்க மாயாவியோ?

அங்கம் பறிக்கும் அசுரர் படையணியில்
என்றும் உறங்காத மாயாவிகளாய் மிதிவெடிகள்,
எங்கும் சிதறிய அகதி முகாம்களிளோ
கண்ணீர் சிந்தும்- அங்கவீனர்கள்

விதைத்தவர் அறுக்காத
விசித்திரப் பயிரிது
மிதித்தவர் அங்கமறுபடும்
கொடூரத் தீ-மிதிப்பிது.

வழியிலும் வயல் வெளிகளிலும் பதுங்கியிருந்து
வழியையும், வாழ்வையும் நிலக்கண்ணிகள் பறித்திட
புல் மேய்ந்த பசுக்களும் முடமாயின-பூமியில்
நடந்த ஏழையின் கால்களும் பறிபோயின

நஞ்சான மனங்களில் கொலை வெறி வாழ
பொன் விளையும் பூமியும், பூஞ்சோலையும்
கண்ணி வெடிகளால் அஞ்சிடும் காலன் புரியானது

அங்கவீனச் சமூகத்தின் அறுவடைக்கு -வித்தாய்
மண்ணில் நிலக்கண்ணிகள்
கோர யுத்தத்தின் அழிவுச் சொத்தாய்
கபாலங்களும், எலும்புகளும்

நிலக்கண்ணி ஒவ்வொன்றின் புதைப்பும்
தாய் மண்ணைக் கற்பழிக்கும் கொடிய நிகழ்வே,
நிலக்கண்ணி ஒவ்வொன்றின் விழிப்பும்-உயிர்
பறித்திடும் உயிர்க் கொல்லியின் கோரச் சிரிப்பே.

அங்கவீனராய் உருவழிந்த மனிதம்
பொய்க் கால்களில் நடந்திட
தர்மத்தை, நீதியை கொச்சைப்படுத்தும்
மாறாத இராணுவ அணிவகுப்புகள்

மண்ணில் விதைத்த நிலக்கண்ணிகளை அகற்றலாம்
மனங்களில் விதைத்த யுத்தவெறியை அகற்றி
அமைதியை விதைத்திட -அவதார புருஷர்களின்,
அன்புச் சீடர்களே வாரீர்

ஊன்று கோல்களும், பொய்கால்களும் ஒலித்திட
அமைதிக்கான புது அணிவகுப்பு
அடக்கு முறைக்கு விடுக்கும் தார்மீக எச்சரிப்பு

மண்ணிற்கான சமாதானத்தின் முதல் முத்தம்
யுத்தம் ஒழிக என்ற ஆனந்தச் சத்தம்

அங்கம் பறிக்கும் நிலக்கண்ணிகளை-அகிலத்திலிருந்து
அழித்தொழிக்கும் காலம் வாராதோ?
தங்கம் விளையும் பூமியினை, நம் தாய் மண்ணை
பங்கம் செய்யும் கொடிய வரட்சியும் முற்றாய் நீங்காதோ?

அமைதி வேண்டும், ஆனந்தப் பூங்காற்று உலாவர வேண்டும்
கனிந்த மனது வேண்டும், நெஞ்சில் கருணை வேண்டும்,
உண்மை நிலைபெறல் வேண்டும்-அகிலம் ஒளிபெறவேண்டும்

மானுடம் அன்பு மயமாக வேண்டும்-
இறைவா உம் இராட்சியம் வர வேண்டும்-என்றும்
உம் சித்தம் நிறைவேற வேண்டும்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-2-4-2023

# நிழலும், நிஜமும்

---

தனி நாடு கேட்ட தமிழ் ஈழத் தலைவர்களும்-தோளில்
மஞ்சள் துண்டு போட்டு, மரத்துப்பாக்கி காட்டி
அஞ்சுதல் நன்றோ தமிழா-நம் அன்னையின் விடுதலைக்கு
நெஞ்சில் வீறு கொண்டெழுதல் உன் கடமையன்றோ என்றார்

போரின் உக்கிரத்தில்-புரட்சிப்பண் பாடிய இறையடியாரும்
தப்பி ஓடி, தமிழகத்தில் விருந்துண்டு ஓய்வெடுக்க
உயர் குடிச் செல்வர் மக்களோ
வெளிநாட்டில் மேற்படிப்பைத் தொடர்ந்தார்

சாதியத் தீயால் வாடிய ஏழைகள், தமிழ் ஈழ விடுதலைக்காய்
தம் சந்ததியைத் தாரை வார்த்துக் கொடுத்திட
விடுதலை வேள்வியில் நாளும் போராளிகளோ ஆகுதி
எரியும் டயர்களில் அப்பாவிகளோ தகனப்பலி

இனவாதத் தீயில் ஈழம் எரிய
போராளிக் குழுக்கள் தம்முள் போராடி மடிய
ஒட்டுக் குழுக்களாய் பல உருமாறிச் சிதைய
சர்வாதிகாரியாய், பாசிஸ்டுக்களாய்த் தலைவர்கள்

கொலைகள் மலிந்து, கொள்ளையும், கப்பமும் பெருகிட
நீதியை மறுத்து, அமைதியை குலைத்து, அராஜகம் பெருகிட
எதிரிக்குத் தோண்டிய புதைகுழிகளில் நம்மவர் உடலங்கள்
கண்ணீர்த் தவமிருக்கும் தாய்குலங்கள்

வாழிடத்தில் வௌவால் தூங்கிட-
கழனிகளும் கண்ணி வெடிக் காடாய் மாறிட
இராணுவக் காவல் அரண்கள் சூழ்ந்த
திறந்த சிறைகூடமான ஊரிலே -கைதிகளாய்
உரிமைக் குடிமக்களின் குடியிருப்பு
பாணன் யாழிலோ முகாரியின் ஆர்ப்பரிப்பு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-11-06.2023*

# நினைவேந்தல்

---

முள்ளி வாய்காலில்-வீழ்ந்தவர்க்காய்
கூடி வந்து கேவியழவும் தடையென்றார்
மாண்டவர்க்காய் நெய் விளக்கேற்றி-இறை
வேண்டல் செய்யவும் தடையென்றார்

முப்படையும், யுத்ததாங்கிகளும் அணிவகுத்துச் செல்ல
துர்ப்பாக்கிய சிங்கள-தமிழ் உறவுகள்
வீழ்ந்தவர்க்காய் கண்ணீர் சிந்த-ஆண்டுதோறும்-
விடுதலைப் புலிகளை வெற்றி கொண்ட நாளை
பெருவிழாவாய்க் கொண்டாடுகின்ற பேரினவாத அரசு

சொந்தங்கள் கூடி வந்து சோகம் செர்லியழத் தடை
வீழ்ந்தவர்க்காய்-விழி நீர்சிந்தி விளக்கேற்றவும் தடை
கோயில் மணி ஒலிக்கவும் கூடிப் பிரார்த்திக்கவும் தடை
மனித உரிமைக்கும், மானுட சுதந்திரத்திற்கும்
ஈழத்தில் இன்றும் தமிழனுக்குத் தடை

முள்ளிவாய்க்கால் அவலம்-நெஞ்சில் நெருஞ்சி முள்ளாய் குத்த
பள்ளி கொண்ட சொந்தங்கள் -நடுகல் இன்றி
நாதியற்ற அநாதைகளாய் எங்கோ சிதறிகிடக்க
புதைத்தனரோ இல்லை எரித்தனரோ மனம் புலம்பி தவிக்க
வதையுண்டு மடிந்தவர்க்காய்-நித்தம் நெஞ்சம் பதைத்திட
நினைவேந்தல் இன்றி வாடும் சொந்தங்கள் இங்கே.

***ன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.3.2023*

# நியாயத் தராசு

---

குற்றம் நிரூபிக்கப்படவில்லை சட்டம் விடுவித்தது
கொலையுண்டவர் குடும்பம் அநாதரவாகிட
கொலையாளி- அமைச்சரான அவலம்
என்றுமுள்ள தர்மம்
நின்று கொல்லக் காத்திருக்கும் நிலவரம்?

வெட்டிக் கொன்றார், சுட்டுக் கொன்றார்
குண்டுகள் போட்டுக்கொன்றார்
ஊர்களை கொளுத்தி அழித்தார்
கடத்தி, மிரட்டிக் கப்பம் வசூலித்தார்,

பிள்ளைச் செல்வங்களை கொள்ளையிட்டு
களமுனையில் பலிக்கடாவாக்கி
அழிவுகளால் ஆயுதபலத்தை எண்பித்து
அராஜகம் புரிந்த பயங்கரவாதிகள்.

அநாதைக் புதைகுழிகளுக்குள் மறைந்த உயிர்கள்
அணையாமல் எரிந்த டயர்களில் எரி பலியான உடலங்கள்
இனவாதம் பேசிட்ட காவிகள்-செவிட்டு
ஊமையாய் மாறிட்ட ஊடகங்கள்
ஓரினத்தின் போராளி, எதிரினத்தின் பயங்கரவாதி
நீதியை மறுத்த யதார்த்தங்கள்

போராளிகளே, போராளிகளைக்
பேராடிக் கொன்ற இயக்கப் படுகொலைகள்
சீருடை இராணுவமும், சிங்கள இளைஞர்களை
சேகுவராவின் சீடர் என வதம் செய்த
வரலாற்று நிகழ்வுகள்

அப்பட்டமான படுகொலைகளில்
அமைதி ப் பிரியர்கள், மனித உரிமைக் காவலர்கள்
அப்பாவிப் பொது மக்கள்

இரத்த வெறியர்கள் மாமனிதர்களாய் உலாவர-
இறைவனைக் கூவி அழைக்கும் சிறுவர் போராளிகளின் குருதி
காயாத குருதியால் குங்குமம் தரிக்கும் மங்கலப் பெண்கள்
புரியாத குற்றத்திற்காய் சிறையிருக்கும் அப்பாவி
அரசியல் கைதிகள், ஈழத்தின் மாறாத அவலங்கள்

கொலை, கொள்ளை புரிந்த வேசி மக்கள்
அமைச்சர்களான அரசியல் விபச்சாரம், இனமழித்த
பயங்கரவாதம், நிறம் மாறிய சந்தர்பவாதம்
ஈழத்தில் இன்றும் மறையாத இனவாதம்

தர்மசக்கரமோ இனவாதச்சேற்றில் புதையுண்ட கிடக்க
இயேசுவோ இன்றும் சிலுவையில் அறையுண்டு தவிக்க-
அகதிகளாய் மக்காவிலிருந்து மதினாவிற்கு ஓடிடும் நபி

தர்ம யுத்தம் என்று ஏதுமில்லை,
மனிதரைக் கொல்ல யாருக்கும் உரிமையில்லை
அரியணையில் இன்றும் இரத்த வெறிபிடித்த
பிலாத்துக்கள்-ஏரோதுக்கள் மஹிந்தாக்கள்-பிரபாக்கள்

நீதிக்கு குரல் கொடுக்காத ஊமைகளும் குற்றவாளிகளே
நீதியை மறுத்து இயேசுவை கொன்றதும் குருக்களே-
குற்றவாளிகளும் நாம், கொலையாளிகளும் நாம்
அகதி, விதவை, அநாதைகளாய்த் துன்புறுவதும் நாம்
இனம், மதம்,மொழி கடந்தால் சகோதரர் நாம்

எரிக்கும் தீயும் சிவப்பு, எம்முள் ஓடும் குருதியும் சிவப்பு-
நம் தேசம் எரிகின்றது.
ஒன்றுபடுங்கள் மக்களே மனித உரிமையை
உறுதி செய்யுங்கள் தோழர்களே

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-பூவுலகில்
நன்மனத்தவருக்கு அமைதி
தூயமனமோ இறை சந்நிதி-மனிதர்களே
இறை அரசு உங்களுக்குள்ளே
நீங்களும் தெய்வங்களே

அமைதியைத் தேடுங்கள் மானுடரே,
அதுவே குபேர நிதி
உண்மை விடுதலை அளிக்கும் மாறாத நியதி

***ஸர்வம் கலவிதம் பிரம்மா-இருப்பதெல்லாம் பிரம்மம் ஒன்றே***
அனுபூதியல் ***அறிந்தால் நாம் சச்சித் ஆனந்தமே***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-19-05-2023*

# ஓ ஈழத் தாயே

---

ஓ ஈழத் தாயே!-உன் அடிமை விலங்கொடிக்க
அன்று முதல் இன்று வரை ஆயிரம் போராட்டங்கள்.
அகிம்சையில் தொடங்கி-ஆயதபோராட்டமாய் உருமாறிய
விடுதலை வேள்வியில்-யாகத் தீயானது சொந்தம்
ஆகுதியானது சொத்தும், பந்தமும்

குண்டாந்தடி முருங்கைத்தடி, தூக்குமேடை பஞ்சு மெத்தை
அகிம்சையின் மந்திரங்கள் வெற்று கோஷங்களாயிட
கண்ணி வெடிகளும் கரும் புலிகளுமாய் விடுதலைப் போராட்டம்
ஆயுதப்போராட்மாய் உருமாறிய நேரம்
தமிழ் ஈழ வரலாற்றின் புதிய அத்தியாயம்

முப்படைகளோடு வளர்ந்த போராட்டத்தில்-உட்பூசல்கள்.
கட்டபொம்மனும், ஊமத்துரையுமாய் போராடியவரிடையே
எட்டப்பர்களின் துரோகம் வரலாற்றின் பழைய பாடம்.

வணங்கா மண்ணில் -தாயே நீ
இன்னோர் திரௌபதியாய் துகிலுரியப்பட்டபோது
வருந்தியவர்களும், வாழவிருந்தவர்களும்
உன் புத்திரரும் மித்திரர்களும் அம்மா.

ஆயுதப்போராட்டம்
அபாயகரமான சூதாட்டமாய் மாறிட
முப்பதாண்டு யுத்தத்தில் நீ இழந்தது பெரிது
அடைந்ததோ அகதி என்ற அந்தஸ்து.

இன்றும் எட்டாத இலக்காய்த் தமிழ் ஈழம்
கட்டிய துணிகளோடும் கண்ணீர் கதைகளோடும்
புகலிடம் தேடும் அகதிகளின் புதுப்பயணம்,
நீலக் கடலில் நாளும் தொடரும் அவலம்
ஒருவேளை--தமிழ் ஈழம்
ஏழ்கடலுக்கு அப்பால் அமைந்த யதார்தமோ?
தாயே சொல்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.03.2023*

# என் நாடு

---

ஓ-என் தெய்வீகத் திருநாடே
முக்கண்ணண் சிவனும், முதல் மனிதன் ஆதாமும்
ஞானசோதி புத்தர் பெருமானும்
கால் தடம் பதித்த ஆன்மீக பூமியே
மகிந்த தேரரால் மதமாற்றம் பெற்ற வளநாடே-இன்று
மதவாதத்திடமும்-சிங்களப் பேரினவாத்திடமும்
மகிந்த சிந்தனையால்
மற்றோர் அகலிகையாய் சோரம் போய்
மனிதம் இழந்து-கல்லாகிட
யாரிட்டார் தாயே உனக்குச் சாபம்?

தர்மத்தை கண்டும் காணாத நிலையில்
பேரினவாதிகளுக்கு தாயான நீயும்
கண்களைக் கட்டிக்கொண்ட
மற்றோர் குருட்டுக் காந்தாரி?

ஆயுதச் சூதாட்டத்திற்கு அடிமையாகி
துகிலுரியப்படும் தமிழ் ஈழ அன்னையும்
உன் அவையில் இன்னோர் “பாஞ்சாலி”

வலிந்த யுத்தம் திணிக்கப்பட்ட நிலையில்
பறிபோன உரிமைக்காய் போராடும்
சிறுபான்மைத் தமிழரும் பாண்டவர்களே.

அரக்குமாளிகைக்கு எரியூட்டிய கொடுமையாய்
தமிழர் குடியிருப்புக்கள் தீக்கிரையாக
தமிழ் ஈழ மண்ணின் சுதேசிகள்-கடல் கடந்த
வனவாசத்தில் புகலிடம் தேடும் அகதிகள்

கருணை வடிவான கௌதம புத்தருக்கோ
நாடெங்கும் சிலைகள்-கருணையில்லா
கல்மனதில் பேரினவாத நிலைகள்

அரசர் பிம்பிசாரனின் யாகத்தை நிறுத்தி
ஆடுகளைக் காத்த கருணை வள்ளல்
மகிந்தவின் யுத்த யாகத்தை நிறுத்தி
அப்பாவித் தமிழ் உயிர்களை காத்திட முடியாது
சிலையான கருணை வள்ளல்

தம்மபதத்தை பின் தள்ளி-இனவாத
யுத்தத்தை முன்னெடுக்கும் -சீடர்களோ
கொடிய அங்குலிமாலாக்கள்

இனவாத சூதாட்டத்தின் புதிய சகுனிகளாய்
காவியுடுத்த போலிகள்
திரிபீடத்தின் முடிசூடா மன்னர்களாய்
தேவதத்தன் சீடர்கள்

பகைமையை, பகைமையால் வெல்ல முடியாது
பகைமையை அன்பினால் வெல்லுங்கள்
தொன்று தொட்டு வரும் தர்மம் இதுவே

பஞ்ச சீலமும், அட்டாங்க மார்க்கமும்
பௌர்ணமி நாள் போதனையானது
தம்ம பதமோ ஏட்டில் உறங்கிட-நெஞ்சில்
இனவாதம் அணையாத நெருப்பானதே

சொந்த பந்தங்கள் இழந்த அநாதை
சொத்திழந்த ஏழை
சோகச் சிலுவையை மனதில் சுமக்கும்
அகதி வாழ்வோ கல்வாரிப் பாதை

காயமுற்ற காயத்தோடு-கானகத்தே
முறிந்த பனையின் கீழ் அமர்ந்து
"ஞானம்" தேடுகின்றேன்
போதிமாதவனே-அருள்புரிவாய்

புத்தம் சரணம் கச்சாமி
தம்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28.3.2023*

# ஓ புலம்பெயர் ஈழத் தமிழர்களே

---

விடுதலைப்போராட்டம் சூடு பிடிக்க, விடுதலை நாடி
செல்வரும், கல்விமானகளும்-நாடுவிட்டு மேற்கு நாடு நோக்கி ஓட
ஆயுதம் ஏந்தி-இனவாத இடி தாங்கி, ஏழைகள் போரடி மடிய-
பொன், பொருள் வழங்கி போரை ஊக்குவித்த
"புலம்பெயர் ஈழத்தமிழர்" ஆறாய் இரத்தம் சிந்தி,
ஓயாது அழுத ஈழத் தமிழன்.

போராளிக் குழுக்கள் தம்முள் போராடி மடிய
நாங்களே தமிழ் ஈழப் பிரதிநிதிகள் என
புலிகள் யுத்தத்தை தொடர-புலம்பெயர் தமிழர்
கொடுத்த செல்வத்திற்கும் அளவில்லை-போராளிகள்
கொள்ளையிட்ட பிள்ளைச் செல்வங்களுக்கும்,
கப்பத்துக்கும், சிந்திய குருதிக்கும் குறைவில்லை

அமைதியை புலிகள் நிராகரிக்க-உலகம்
பயங்கரவாதிகள் என புலிகளைப் புறக்கணிக்க
ஈழத்தமிழர் அழிவில் முடிந்த போர்
எல்லாமழிந்திட காடாய் மாறிட்ட ஊர்

போர் முடிந்து பத்தாண்டு போனபின்பும்
ஆறாத காயங்களாய், தீராத சோகங்களாய்
பல்லாயிரம் இளம் விதவைகள், அகதிகள்-
அநாதைகள், அங்கவீனர், ஏழைகள்

காணாமல் ஆக்கப்பட்டோர்-விசாரணையின்றி
சிறைகளில் தடுத்துவைக்கப்பட்டோர் அவலம் தொடர
பரிதவிக்கும் ஏழைகளின் குரல்
புலம்பெயர் தமிழருக்கு எட்டவில்லை
பிள்ளைகளைப் பறித்து போர் நடத்தி-தப்பி
ஓடிய போராளிகளுக்கும் கேட்கவில்லை,

நல்ல சமாரித்தனாய் இங்கு யாருமில்லை, நாதியற்ற ஏழைகளின்
வாழ்வில் தமிழ் கட்சிகளால் என்றுமே விடியலில்லை?
புலம்பெயர்ந்த தமிழர் தமிழ் ஈழ அரசமைத்து கற்பனையில் ஆள
ஜெனிவா மனித உரிமை மாநாட்டில்-ஆண்டுகளாய்
புலிக்கொடி பிடித்து கோஷம் எழுப்பிட, கலைந்த
தமிழ் ஈழக்கனவு, கலையாத ஏழைகளின் துயர உணர்வு

வாழ ஒரு வீடும், வாழ்வாதாரத்திற்கு ஒரு தொழிலும்
ஏழைகளுக்கு ஈய யாருமில்லை
தமிழனுக்காய் ஒரு பல்கலைக் கழகமோ,
நவீன தொழிற்நுட்பக் கல்லூரியோ,
தொழிற்பேட்டைகளோ அமைத்து வாழ்வை மாற்றிட
புலம்பெயர் செல்வருக்கோ மனமில்லை.

இன்றும் ஈழத் தமிழ் அரசியல்வாதிகள்
இனவாதப் பாதையில் நடைபோட,
வட கிழக்கு விடியலின்றி இருளில் தள்ளாட
கத்தியின்றி, இரத்தமின்றி வறுமையோடு போராடி
விதவைகளின் உடல்கள் மலிவாய் விலைபோக
காட்டாறாய் பாயும் மதுவிலே மூழ்கி
தம்மை மறந்த இளைய தமிழன்

வட கிழக்கு இணைப்பிற்கு-முஸ்லீம்களின் ஆதரவு
இன்றியமையாத ஒன்றாக இன ஒற்றுமையே
வாழவைக்கும் தேசியமாக, ஒன்றுபட்ட முஸ்லீம்,
சிங்களம் ஆட்சிபீடம் அமர, எந்நாளும் தமிழர்
எதிர்த்து கூப்பாடு போட, பிளவுபட்ட தமிழனுக்குதான்
எத்தனை கட்சிகள்-? தம்முள் போராடி அழிந்த
தமிழ் இயக்கங்கள்தான் எத்தனை?

தமிழர் ஒன்றுபட ஒரு கட்சியும் உண்டோ?
தமிழன் ஒன்றுபட்ட வரலாறும் உண்டோ?
சேர, சோழ, பாண்டியர் வாரிசுகளே கூறுங்கள்?
ஒற்றுமையின்றி அழிவதே தமிழர் வரலாறு-கனடிய
புலம்பெயர் தமிழர் வாழ்விலும் இது கண்கூடு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# ஓ தோழர்களே

---

ஓ தோழர்களே! ஈழ விடுதலைக்காய் எழுச்சியுற்ற -வீர
மறவர்களே, உடல் தமிழுக்கும், உயிர் மண்ணிற்கும் என
அடிமைத் தளையுடைக்க, அக்கினியாற்றில் தினம் நீராடி
ருத்தரதாண்டவம் ஆடிய கூத்தர்களே வாழி

நீலகண்டன் கழுத்திலோ நாகம்
விடுதலை வேட்கை கொண்டு
ஆயுதம் தாங்கியாடும்-உம் கழுத்தில்
ஆலகால சயனைட்

ஏடும், எழுத்தாணியும் கொண்டு எழுதாமல்
இரத்தத்தாலும்-நெருப்பாலும் படைத்த வீர காவியம்
ஈழத்துப் பரணி-வல்லரசுகளும் வியந்திட
ஆடிய ருத்திர தாண்டவமோ அஸ்தமித்த பௌர்ணமி

அக்கினி புத்திரரே, அஞ்சாமை உங்கள் பிறப்புரிமை,
சீறும் புலியின் உறுமல் கேட்டு சிங்களச் சிங்கமும் பதுங்கிட.
வல்லரசும் ஒதுங்கிட, போராட்டத்தைக் காட்டிக் கொடுத்த
குள்ள நரிகள், நிறம் மாறி முதுகில் குத்திய அவலங்கள்

மண்ணிலும் மறையாத குருதிச் சிவப்பு-கரை மோதும்
அலைகளிலும் மறையாத கடற் புலிகளின் நெருப்பு
வான் எழுந்த தீயிலோ உங்கள் தேகத்தின் வாசம்
வீழ்ந்தபோதும் மூச்சிலும் சுதந்திரக் காற்றின் சுவாசம்

தர்மச் சக்கரமும் குருதிச்சேற்றில் புதைந்திட
வெளிறிய சீவர ஆடையும் குருதியால் சிவந்திட
ஈழத் தமிழா இன்னும் கொஞ்சம் இரத்தம் கொடு-
இனவாத வேண்டுதல்தான் என்னே?

வீரனுக்கு மரணமில்லை, வீழ்ந்தாலும் வாழ
வரலாற்றில் சாகா வரம் பெற்ற மாமனிதர்கள் நீங்கள்
பிறந்த மண்ணிலும், கடல் கடந்தும்-இன்றும்
புகலிடம் தேடும் அகதிகளாய் நாங்கள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-13.8.2023*

# ஒழிக யுத்தம்-ஓங்குக அமைதி

---

***மறவர் படைதான் தமிழ்ப்படை, குலமானம் ஒன்றுதான் அடிப்படை***
***வெல்வோம் இல்லையேல் வீழ்வோம், அடிதொழுது வாழோம்***
***தமிழ் ஈழமே எங்கள் தாயகம்-அதுவே எங்கள் தாரக மந்திரம்***

யுத்தம் மனிதத்தை அழித்ததிட-கொலையும்,
வன்முறைகளும் யுத்த நீதியானது-குருதி வெறி பிடித்த
யுத்தவெறியர் அமைதிப் புறாவை வேட்டையாடிட-எட்டாத
நிலவானது அமைதி, சோகம் எல்லோருக்கும் சொந்தமானது

கண்ணீரும், அழுகையும் ஓயாத பூமியில் நாளும்
கொடூர மரணங்கள்-விதவை, அகதிகளாய் மானுடம்  மாறிட
கண்களிலே கங்கை, நெஞ்சிலே அணையாத காங்கை.
அமைதிக்காய் யுத்தம் என்பதில் உண்மையில்லை

***ஓரினத்தின் போராளி-எதிரினத்தின் பயங்கரவாதி***
இன, மத, மொழியால்-மானுடத்திற்கு, மானுடம்
எதிரியான அவலம், வல்லரசுகளின் பனிப் போர்களால்
உலக அமைதி கனவாய், பழங்கதையாய் மாறிய துயரம்

கண்ணீர் சிந்தி கலங்கியழ இனியொரு யுத்தம் வேண்டாம்-
மனம் நொந்து இனமழிய யாரும்-இரத்தம் சிந்தவேண்டாம்
யுத்தம் ஒழிந்து அமைதி நிலவிட- சமாதான புத்திரர்களே
ஒன்றுபட்டு உலகைக் காத்திட வாருங்கள்

வல்லரசுக் கனவைத் துறந்து, வெள்ளரசு மரநிழலில்
அமர்ந்தவர், உலகம் போற்றும் ஞானபுத்தரானார்:
சிலுவையில் இன்னுயிர் ஈந்தவர்-என்றும்
மானுட மனம் வாழும் அன்பின் பேரரசரானார்

யுத்தங்கள் சாதித்தது ஏதுமில்லை-எங்கும் இரத்தமே
பகைமையை பகைமையால் வெல்லமுடியாது
பகைமையை அன்பினால் வெல்லுங்கள்-
***என்றுமுள்ள தர்மம் இதுவே-ஏஸ தமமோ சனந்தானே***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-13.8.2023*

---ஓம் சக்தி ஓம்---  --- 

விறைத்த ஆண்குறி முறிந்த பனையின் கோரம் காட்டிட
முறைக்கும் பார்வையோ உயிரை பறிக்கும் எமனையும் வாட்டிட
காமுகன் பாதி காட்டேறி பாதி செய்த கோரக் கலவை
படைக்கலம் தாங்கி உயிர்க்கலம் அழித்து
ஊரை கொலைகளமாக்கியே காமம் தணித்திட
வன்புணர்ச்சியால் வாதை செய்து குலவிளக்குகளை அணைத்து
குருத்தினை அரித்து முன்னேறி வருகின்றது
தமிழ் அன்னையரே தங்கையரே
கவனம்! கவனம்!

உயிர்க் குருதி குடித்து சூடான படைக்கலமும்
"தாகம்" என்று வருந்திட, சுக்கிலமும் சூடாகிக் கொதித்தே
யோனிக் குளத்தில் "நீராடத்" துடித்திட -வருகின்றது
வன்புணர்சியால் வாதை செய்யும் சிங்களப் படையணி

அன்னையரே தங்கையரே அழவேண்டாம்
ஆடை களைந்து அம்மணமாகுங்கள் -எம்
உறவுகளை வீழ்திய அசுரர்கள், விறைத்த
ஆண்குறிகளோடும் முறைத்த பார்வையோடும்
வெறிகொண்டு எம்மை வல்லாங்கு செய்திட
வருகின்றார், அழவேண்டாம் அஞ்சவேண்டாம்
போராடி உயிரை மாய்க்கவும் வேண்டாம்

இனவெறி நெஞ்சினைத் தீய்க்க-சுய நினைவை மது மாய்க
தீயிட்ட ஊரெல்லாம் நோயுற்று பேய் வாழும் காடாகிட
தமிழன் உடலமெல்லாம் நாறி மணந்திட
சொந்தங்களோ அநாதைகளாகி கண்ணீரில் மூழ்கிட
தீராத கொலைவெறியோடும் நீட்டிய துப்பாக்கியிலும்
நெடிதாய் விறைத்த ஆண்குறிகளோடும்
காமவெறிகொண்ட இராணுவம்
வல்லாங்கு செய்திட வருகின்றது.
கன்னியரே அன்னையரே அஞ்சிக் கலங்கவேண்டாம்.
அம்மணமாகுங்கள் அன்னையரே தங்கையரே

செந்தமிழன் இரத்தத்தால் சீவர ஆடையையும்
சிங்ககொடியையும் சிவப்பாக்கிய தேவத்த்தன்
சீடர்கள் வருகின்றார்கள் அம்மணமாகுங்கள்

இரத்த காடடேறியின் கண்களில் கொலைவெறி தாண்டவமாடிட
விறைத்த ஆண்குறியில் காமம் நெறி பிறழ்ந்து அலைமோதிட
வருகின்றது வல்லாங்கு செய்யும் வீரப் படையணி

தீக்குளித்த பத்தினிகளும் தீய்ந்தே கருகுவார்
இவர்தம் காமத்தீயில்-ஆகுதியாய் வெந்து கருகுவார்
அரக்கரிவர் காம வேள்வியில்

எம் குருத்துக்களையும் குலவிளக்குகளையும்
வல்லாங்கு செய்து வாட்டிய இனம், பொல்லாங்கு செய்திட
புரையோடிய இனவெறியோடு வருகின்றது.
அன்னையரே தங்கையரே-அழவேண்டாம்.

இலிங்க கலப்பை பூட்டிய சிங்கள காமக் காளைகள்
எம் யோனிக் காடுகளை உழுது களைக்கட்டும்
அசுர இனத்தின் கொடிய விதைப்பை
எம்முள் விதைத்து ஓயட்டும்.



விறைத்த ஆண்குறிகளின் புடைப்பு தளர்ந்தபின்
களைத்த மிருகத்தின் காமவெறி தணிந்தபின்
எம்மை கொன்று மாய்கட்டும்
எம் யோனிகளை குண்டு வைத்து தகர்க்கட்டும்

தாய்பாலோடு தமிழ்பாலும்
ஊட்டி வளர்த்த கொங்கைகளை
அறுத்து எறியட்டும் தமிழச்சி நாங்கள்
அஞ்சோம் நெஞ்சு கலங்கோம்

கண்கள் சிவப்பாகி காதலால் நெஞ்சு மகிழ்ந்தவள்
கணவனிடம் காமன் திருச்சபைக்கு வழிகேட்டவள்
கண்கள் பனித்திருக்க-உயிரும் உடலும் சிதைந்திருக்க
வண்ணமிழந்த ஓவியமாய் -உடைந்து நொருங்கிய
மூளிச் சிற்பமாய் உயிரிழந்து கிடக்கின்றாள்.

ஓ சிங்களச் சகோதரிகளே! உங்கள் யோனிகளுக்கு
இனி வேலையில்லை, தீய்ந்த எம் மேனிகளை
மேய்ந்து களைத்த உங்கள் காதலர்களுக்கு இனி
ஒரு யோனி தீண்ட நாதியில்லை
நஞ்சான யோனிகளையும்
நா தந்த விஷ முத்தங்களையும் சுகிர்த்த
நயவஞ்சகன் -நெடுநாள் வாழ்வதில்லை

நஞ்சுண்ட யோனிகளோடும் -நா கொண்ட விஷத்தோடும்
அஞ்சாத் தமிழினத்தின் ஆரணங்குகள் நாம்
வெஞ்சினத்தோடு உம்மை காமத்தால் வீழ்த்தினோம்
வெறியர்களே உம் மனைவியரும் இனி விதவைகளே
உமக்கும் ஒரு சந்ததி உருவாகும் என்பதும் வெறும் கனவே.



காதலாகிக் கசிந்தே சிவ-சக்தியும் உருவழிந்து ஒன்றாகிட
காமன் திருச்சபையில் களி நடனம் புரிந்தார்
“லிங்கசாமியும்” “யோனிவாசல்” நுழைந்தே
“கர்பகிரகத்தில்”“சக்தி” பூஜையை
பத்தியாய் புரிந்திட சக்தியும் சிவனும்
பேரின்பத்தால் உருமாறி சிவசக்தியானார்
சகுனபிரம்மத்தில் அர்த்நாரிஸ்வரனானார்
ஆனந்த சமாதி நிலையடைந்தார்.



உருவழிய மனமழிய-துவைத நிலையழிய
அத்வைதம் பிறந்திட
ஓங்காரம் அதிர்ந்திட எங்கும்
சத் சித் ஆனந்தம்

ஓம் ஓம் ஓம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

*Pax Ravichandra-27.2.2023*

# ஒரு துளி இரத்தம்

**ஆயுதக் கலாச்சாரம் எம்மை ஆண்ட கொடுங்காலம்**

பெற்றோர் அழுது புலம்பிடச் சிட்டுக் குருவிகளைப் பிடித்து
சிறகுகளை முறித்து பள்ளி படிப்பைப் பறித்தார்
ஆயுதப் பயிற்சி அளித்து யுத்த முனையில் களப்பலியாக்கி
இரத்தவெறி தணித்தார் கொடிய யுத்த வெறியர்

போராளிகளைக் கண்டு தமிழினமே அஞ்சிட
ஆயனே அரக்கனாய் மாறி மந்தையை அழித்திட
இயக்க மோதல்களால் இரண்டு பட்ட தமிழினம்
நூலறுந்த பட்டமாய் விடுதலைப் போராட்டம்

கொள்ளையும், கப்பமும், ஆட்கடத்தலும்-பிள்ளை
பிடித்தலும் நீதியானது-அமைதிக்காய் குரல் எழுப்பிய
மிதவாதத் தலைவர்களின் படுகொலைகளால்-
சர்வதேசம் பயங்கரவாத முத்திரை குத்திட
போராட்டம் வலுவிழந்து போனது

துஞ்சுதல் ஒருமுறை, அஞ்சுதல் எதற்கோ ?
கோஷம் எழுப்பிய வீரத்தலைவர்கள்
வெள்ளைக் கொடிகளை கச்சைகளில் மறைத்து,
சயனைட் குப்பிகளை சாலையோரம் புதைத்து
எரியும் டயர்களைச் சுற்றியிருந்து-அச்சக் குளிர்காய்ந்திட
ஆறாய் ஓடிய அப்பாவிகள் இரத்தம்-அகதி, விதவை,
அநாதை, அங்கவீனராய் மானுடம்

முப்பதாண்டுகால யுத்தத்தில் அப்பாவிகள்
சிந்திய இரத்தம் நீதி கேட்டுக் கதறிடத்
தர்மமும் கை நெகிழ்ந்திடத் தோல்வி நிஜமானது
தமிழ் ஈழம் கலைந்த பகல் கனவானது

மனித வாழ்வு புனிதமானது
மனிதத்தை அழிப்பது மாபாதகம்
மானுடம் வாழத் தம் வாழ்வை
அர்ப்பணமாக்குவதோ புனிதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-06-05-23*

# ஒரு வழிப் பயணம்

---

பயணம் தொடங்கினோம்-பாதிவழியில்
திசைமாறிச்-சோதனைச் சாவடியில் தொலைந்த
பயணிகளோ பயங்கரவாதிகளானோம்

பலாத்காரமாய் பயணம் திசை மாறியபோது
பயத்தில் உறைந்துபோனோம்-எம் வருகைக்காய்
வழிமேல் விழி வைத்து காத்திருக்கும் உறவுகளின்
கண்ணீர்க் கறைபடிந்த முகங்கள்- கனவிலும்
எம்மை அழவைக்க, இருட்டறையில்
தவித்து துடிக்கும் என் இதயம்

விடியல் தெரியாத இருளில் அடியும், உதையும்,
அழுகையும், கூக்குரலும் எம்மை அச்சுறுத்திட,
எரியும் டயர்களில் வரும் மாமிச வாசைன
எம் மூச்சைத் திணறடித்தது

விழிக்க வைத்து விசாரணை செய்தவர்கள்
வினாக்கள் புரியாதபோது-அம்மணமாக்கி
அடித்துச் சிதைத்து-அந்தரத்தில்  தொங்கவிட்டு
கொடுந் தீயில் வாட்டி விடை தேடினார்கள்

நைந்து வெந்த தேகத்தில் உயிர்ப் பறவையின் துடிப்பு ஓய
நள்ளிரவில் வெட்ட வெளியில் நிற்க வைத்து
முட்டியில் சுட்டு முடமாக்கி-தீ மேயும் டயர்களுக்கு
என்னைத் தீனியாக்கும் புனிதச் சடங்கு

மூடிடும் என் விழிகளுக்கு வீடு செல்லும் பாதை
துல்லியமாய்த் தெரிந்திட
என் ஆனந்தப் பயணம் தொடங்கியது.

பிரியா விடை சொல்லாமல் போகின்றேன் பிரிய தாயே,
ஒரு போதும் என் நெஞ்சம் -உன்னை மறவாது
உயிர் போகும் போதும் என் உயிரில்
உன் நினைவைச் சுமந்தே செல்கிறேன் அம்மா

தாயே, என் தெய்வமே வாடாதே, வருந்தாதே.
விடுதலையின் ஒளிக்கீறு கீழ் வானில் தெரிகிறது.
புது விடியல் புலர்கின்றது-கலங்காதே அம்மா

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-2-4-2023*

# ஒற்றுமை

---

ஒரு யுத்தம் முடிந்தும்-இன்றும்
ஒன்றுபடாத ஈழத்தமிழினம்,
சிந்திய இரத்தம் காயாத நிலையில்
ஒற்றுமைக்கோ பெரும் பஞ்சம்

உலகெங்கும் அகதியாய் ஓடியும்
சாதியம் காத்திடும் சாமர்த்தியம்-
நெஞ்சை வருத்தும் நிதரிசனம்

நல்லோரைக், கற்றவரைப் புறந்தள்ளி-
ஒத்து ஊதுவாருக்கு-அரசியலில் முதலிடம்
பட்ட துயர் போதாதென்று இன்னும் நாம் பிளவுற
நம் மத்தியில் நாளும் பல கட்சிகள்

இன ஒற்றுமை மறந்திவர்-இன்றும்
சேர. சோழ, பாண்டியராய்ப்
தம்முள் போரிட்டு அழிந்திட
ஈரவிழிகளோடு தவமிருக்கும் தாய்க்குலம்
கனவு கலைந்த விழிகளோடு
சிறையிலோ அரசியல் கைதிகள்-முகாம்களில்
நடைப்பிணங்களாய் அகதிகள்
என்னே எங்கள் ஈழத் தமிழ் இனம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19-05-2023

# பாடல் மறந்த குயில்- இசைப்பரியா

---

புலிகளின் காணொளியில் செய்தி வாசித்த **புள்ளிக்குயில்**
சேனல்-4விலும், உலக காணொளிகளிலும்
அவலச் செய்தியான துயரமின்று.
***பூபாளம் பாடிய குயிலிற்கு***
***முகாரி பாடியது உலகமின்று.***



இரத்தபிரியர்களின் யுத்தகோஷம் வானில் மோதிட
தமிழ் மகன் குருதியும், குலமகள் கற்பும்,
ஓமத் தீக்கு நெய்யாய், காமப்பேய்களுக்கு ஆகுதியாய்
யாக குண்டத்தில் வீழ்ந்திட,
இரத்த வாடை வீசும் யுத்த பூமியில்
இரத்தக் காட்டேறிகளின் அசுரயாகம்.
**

வண்ணம் புலப்படாத  அதிகாலைப் பொழுதில்
வானம் தூறலாய்க் கண்ணீர் சிந்தி அழுதிட
காமப்பேய்களின் மோகத்தீயில் கருகிய பூவை
இசைப்பிரியா -மண்ணில் கிடந்த பாவை

பொட்டல் காடெங்கும்-திட்டுத் திட்டாய்
வண்ணத் தமிழ் இரத்தமிட்ட சுதந்திரக் கோலம்
கலைவதா? கரைவதா? எனக் கலங்கி நிற்க,
அஞ்சிக் கலங்கிய புள்ளினமும், பூவினங்களும்

வெறிபிடித்த ஓநாய்க் கூட்டம் வேட்டையாடிய புள்ளிமானை
கொல்வதா-கீறிக் கிழிப்பதா என மயங்கி நிற்க
வேரறுந்த கொடியயெனத், தோகையிழந்த மயிலென
மங்கையிவள் மழை நீரில் விழுந்து கிடந்தாள்.

அம்மணமான உடலெங்கும்-வல்லுறவின் ரணங்கள்
ஆறாத் துன்பம் தர, கந்தையாய் நைந்த மனசு
இனிக் கலக்கமில்லை, கண்ணீரில்லை
எல்லாம் முடிந்ததென்று சாவுக்காய் ஏங்கியது

கைதான நாள் முதல், பாலியல் வன்முறைக்குப்
பலியாகி நைந்த பொன்மேனி எங்கும் காயங்கள்
நீல வானை வெறித்து நோக்கிய-நீர் வற்றிய
விழிகளிலே மதுரையை எரிக்கும் கோபங்கள்

மாவீரரும், தோழரும் மாலையிட்ட கணவனும்
போர்களத்தே மாண்டார் என்ற செய்தி
மனதை சிதைக்க-துடித்த நங்கை
மரணத்தை வா என அழைத்த வீரமங்கை

உடல் உண்ட காமப்பேய்கள், உயிர் உண்ணப்
பிணந்தின்னி கழுகுகளாய் கூடி வரக் கண்டாள்
உருகும் விழிகள் கனல் ஏந்திச் சிவக்க
உள்ளம் கொதிக்க மனதால் சபித்தாள்

விழுந்து கிடந்தவளை எழுந்திட செய்தவர்,
வெற்றுடலை மறைத்திட வெள்ளைத் துணி கொடுத்து
"*பிரபாகரன் மகளிவளை- கொல்லுங்கள்*" என்றே
கூற்றுவனை அழைத்தார்.

"***இல்லை அது நானில்லை*** " என்றவள் சொல்லில்
பட்ட துயர் எல்லாம் மீண்டும் வெளிப்பட,
பின்னிய கால்களும், குழறிடும் மொழிகளும்,
கண்ணீர் பொங்கிடும் விழிகளும்,
மரணபயத்தை காட்டிட மாதிவள் நடந்தாள்
"சா"-தனைக்காண.

பொன்மாலையும்,- பூமாலையும், மணமாலையும்
சூடிக்களித்த பொழுதும்-விடமாலை சூடி
களமாடிய வீரப்பொழுதும் கனவாய்க் கற்பனையாய்
பழங்கதையாய் ஆகிட-விடமாலை இழந்த
நிலையில் சரணடைய நிகழ்ந்த விபரீதம்
மரணத்திலும் கொடுமையானதாய் மாறியதே

வெறி நாய்கள் சூழ்ந்து வர-வெள்ளாடை போர்த்து
கண்ணீர் மாலை சூடிய காரிகை
பிணமாலை சூடிடத் துணிந்து நடந்தாள்.

வண்ணப் பூச்சரத்தை -கண்ணீர்ச் சரமாக்கி,
தீச்சரத்தால் சுட்டு மண்ணில் வீழ்த்திய நச்சரவங்கள்,
"கொலைவெறி" தலைக்கேறிட
"ஜெயவேவா" "ஜெயவேவா" என்றே!
வெறியாட்டம் போட்டு ஊளையிட்ட நரிகள்

கள்ளிருக்கும் வாசமலரைக் கசக்கி முகர்ந்தபின்
கொன்றழித்த காமப்பேய்கள்-முள்ளிருக்கும்
ரோஜா மலர் தேடி உள்ளிருக்கும் காமம் துரத்திட,
கொலை வெறியோடு நந்திக் கடலோரம்
பேயாய் அலைகின்றார் தாய்குலமே கவனம்

தாய்குலத்தைச் சீரழித்த-சிங்களக்
காமப்பேய்களை வதைத்து அழித்திட
கன்னியரே உருவெடுங்கள்-
"மாகாளியாய் "
மங்கையரே புதுப்பிறப்பெடுங்கள்
மதுரையை எரித்த "கண்ணகியாய்"

இராம அவதாரம் எடுத்திட வேளை வந்ததடா
"தம்பி" தூங்கியதுபோதும் விழித்தெழுடா-
அன்னை சீதை சிறையிருக்கின்றாள்.
இராமன் களத்தில் நிற்கின்றான்
பக்த அனுமானாய் விஸ்பரூபம் எடடா தமிழா

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-4-03-2023*

# பாடல் மறந்த பாடல்

---

கடல் ஒரு புறம், கரை காணா எதிரியின் படை மறுபுறம்
நெருக்கிட-ஊர்விட்டு ஊரோடிய மானுடம்
இருதலை கொள்ளி எறும்பாய்
நந்திக் கடலோரம் வாடி நின்றது

நாற்புறமிருந்து நாளும் பொழியும் குண்டுகள்
வாழிடத்தை ***யாக குண்டமாய்*** மாற்றிட
இரவும் பகலும் தொடரும் அசுர வேள்வியில்
ஆகுதியாகும் அப்பாவித் தமிழினம்

கின்னரமும் யாழும் நொருங்கி கிடந்திட
நந்திக் கடலருகே குந்திக் கிடந்து
விழுந்த சொந்தத்தை கட்டியணைத்து
விம்மியழுகின்றார் உறவுகள்

உப்பி ஊதி மிதக்கும் உடலங்களில் நெடி
தென்றலில் கலந்து சுவாசத்தை நெரித்திட
நண்டும் மீனினமும் இறந்தது
நம் உறவென்று உண்ணா நோன்பிருந்திட
கூடி வந்த சொந்தமெல்லாம் கதறியழுகின்றது
"என் இறைவா , என் இறைவா
ஏன் எம்மை கைநெகிழ்ந்தாய்" என்று

தங்க மணற்பரப்பெங்கும் சிந்திய
குங்குமாய்க் குருதிக்கோலம்-அங்கம்
சிதறிய உடலங்கள் எங்கும் சிதறிக் கிடக்க
வங்கக் கடலும் கரைதொட்டு அழுதது

சீறும் புலியென வாழ்ந்த இனம் சீரழிந்து
முயல்களாய் வேட்டையாடப்பட -ஓடிச் சோர்ந்து
வாடிக்களைத்து மண்ணில் விழுந்து-வாழ்வைச் சபித்து
மாரடித்துப் புலம்புகின்றார் ஏன் பிறந்தோமென்று?

ஒன்றாய் வாழ்ந்த நாட்கள் கனவாய் மாறிட
உயிர் தப்பி பிழைத்த வாழ்வு ஒரு முடிபுக்கு வர
நன்றாய் வாழ்ந்தவர் அகதிகளாகி அழுது புலம்புகின்றார்
ஆருயிர் உறவொல்லாம் மடிந்து போனதென்று.

வென்றவர் விழாவெடுக்க-வீழ்ந்தவர்
கணமூடிக் கிடக்க-மீந்தவர்
கைதிகளாய்ச் சிறையிருக்க எம்மைப்
பாடச் சொன்னால் எதைப் பாடுவோம்?

யாழும் கின்னரமும் தீண்டுவாரற்று மண்ணில் கிடக்க
வாழும் கலையோ சாவு நிஜமென்று உரைக்க
பாடல் மறந்த குயில்கள்-ஒன்றாய்க் கூடிக்
கேவி கரைகின்றன மாய வாழ்வை எண்ணி.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4-03-2023

# படிக்காத கடிதம்

---

சிவந்து மணந்த நந்திக் கடலில்
மிதந்தும் புதைந்தும் கிடந்தன
சுதந்திர விதைப்பின் வித்துடல்கள்

உண்டு கொழுத்த மீனும், நண்டுகளும் உண்ணா நோன்பிருக்க
உருகும் விழிகளோடு தப்பி பிழைத்த உறவுகள் சோகத் தவமிருக்க
நந்திக்கடலின் அலைகளும் கரைமோதி அழுது சிவந்தன.

நீரும் எரிந்திட நிலமும் எரிந்திட
ஊரும் எரிந்திட உறவுகளும் எரிந்திட
வான் மழைபோல் குண்டு மழை பொழிந்திட
சோகத் தீயணைக்கும் படையாய்
காணும் முகங்களிலெல்லாம் கண்ணீர் மழை.

நிலவு விழிக்காத இரவுப்பொழுதில், கண்விழித்த வெள்ளிகளும்
கரும் புகையால் கண்கலங்க-புண்பட்ட காயங்களும்
மருந்தின்றிச் சீழ்பிடிக்க-உயிர் பறிக்கும் துப்பாக்கி, பீரங்கிகளும்
உயிருண்ட களைப்பில் உறங்கிக் கிடந்தன

தீமேய்ந்த உடலங்களும் உடமைகளும் சாம்பலாய் பூத்து நிற்க
உயிர் தப்பிய உறவுகள் சோகத்தை சுமந்து ஒளிந்திட இடந்தேடிட
உயிர் பிழைக்க ஓடி ஒளியும் வாழ்வில் -புகலிடமே
மயான பூமியானது,-சரணாலயமே கொலைக் களமானது

ஓடிக் களைத்த மானுடம் முள்ளிவாய்க்காலில்-
ஓட வழியின்றி முடமாகிப் போயிட
ஆழ்கடலும் பேராயுதங்களும் அச்சுறுத்த
யுத்த வேட்டையில் தப்பிப் பிழைத்தலும்
தக்கன பிழைத்தலும் வலுவிழந்த யதார்த்தமாயின

அலைமோதும் கடலோரம் அநாதைகளான மானுடம்
காணொளியும் வானொலியும் காட்டிய மானுட அவலத்தை
பார்த்தும் படித்தும் நெஞ்சிளகாத உலகின் கல் மனம்

மண்ணைச் சிவப்பாக்கி-மாதவனைக் கூவியழைத்துக்
களைத்த இரத்தம்-நந்திக் கடலும்
பாரோவின் படைக்கு வழிவிட செங்கடலான யுத்தம்
இனவழிப்போ மகிந்தவின் அசுர யாகம்

அக்கரையில் அலையும் சிங்கம்-இக்கரையை
குறிவைக்க, அக்கறையின்றி வெறித்த விழிகள்
இதுதான் கடைசி இரவென்று தவமிருக்க
குண்டு பட்டு பூவாய் உதிரும் உயிர்கள்

உலா வந்த வான் மதி உடல் மெலிந்து தேய்ந்தது
கனவில் வந்த விமானம் குண்டு மழை பொழிந்திட
கைசூப்பி பசியில் உறங்கிய குழந்தை தேம்பியழுதது.

வித்துடலாய் விழுந்த தோழனை வெண்மணலில் விதைத்து
விம்மலையும் பெரு மூச்சையும் நெஞ்சில் புதைத்து
எல்லாம் கனவான உலகில்-ஈழத் தாயகமும்
கலைந்த கனவாக -கலங்கி நிற்கும் போராளி

என் உயிரில் கலந்த உறவே-என் தாயே
என் உயிர் பிரியும் இரவுக்குள்-
உனக்காய் நானெழுதும் மடலிது அம்மா.

நீயில்லாத பொழுதோ-நிலவில்லா வான் ஆனது
அன்புத் தேனின்றி உன் தேன்சிட்டு பசியால் வாடுது
அன்னையே என் ஆனந்த உறவே
உன்னைக் காண இன்னொரு உதயம்
நாளை உண்டோ தெரியவில்லை -உயிர் பிரியுமுன்
உன் மடியில் ஒரு முறை தலைவைத்து உறங்கிட
ஒரு நாழிகை கிடைத்தால் அதுவே பெரும் பேறு

உடல் மண்ணுக்கும் உயிர் தமிழுக்கும் என
வாழச் சொல்லித் தந்தவளே-உயிர் பிரியுமுன்
உன் அன்பு முகம் காணத் தவிக்கின்றேன்.

அம்மா என ஆசை தீர அழைத்து
உன் மடியில் தலை வைத்து உறங்கிடத் தவிக்கிறேன்
தாயே என் தவமே என்னை மறவாதே

இடி மின்னலாய் விழும் எறிகணைகளும் குண்டுகளும்
ஊனைச் சிதைத்து உயிரைப் பறிக்க
கரும் புகையோ வானைப் பழித்து நிலவை மறைக்க
உதயம் காணா இருளில் உன் மகன் தாயே.

குண்டு துளைத்த உடல் குருதிப் பூச்சூடி மலர்ந்திருக்க
சிந்திய குருதியால் சிவந்த மண்ணும்-விடுதலைக்காய்
செங்கொடி பிடித்திருக்க-வான் வீடு தேடி
உயிர் குருவி பறந்திட-எழுதிய மடலோ
அநாதையாய் காற்றில் அலைந்தது.

கன்றைப் பிரிந்த தாய்ப் பசுவோ
கண்ணீரில் தவமிருக்கும்-காற்றில் அலையும்
கடிதமும் ஒரு நாள் அவள் காலடி தேடி வந்து
மகனின் அன்பைச் சொல்லும்

கண்ணீரும் பாசமும் கலந்தெழுதிய மடலில்
தனயன் உண்ட தாய்பால் செங்குருதியாய் படிந்திருக்க
அலையும் காற்றில் அழியாத உறவைத் தேடி.
ஆடிப் பறந்த கடிதம்-நூலறுந்த பட்டம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30.3.2-23*

# முறிந்த பனையும் கானம் மறந்த பாடும் மீனும.

---

“வா” என்றே கூவியழைக்கும்
கடல் தாயின் குரல் கேட்டு வாடி நின்றார்,
தொலைவில் வருந்தி நின்றார்-
ஏழைத் தமிழ் மீனவர்

அணைக்கத் துடிக்கும் அலைக்கரங்கள்
வா என்றே கூவியழைக்க,- களைத்துக்
கரைமோதி வீழ்ந்து அழக் கலங்கி நின்றார்

அள்ளித்தர அன்னை மடியிலோ ஆயிரம் பரிசுகள்
அரைவயிற்று கஞ்சிக்காய் அல்லாடும்
சேய்களோ வறுமையின் புதிய வாரிசுக்கள்.

வற்றாத கடற் செல்வத்தை  நாளும் அள்ளிக்கொடுத்து
வாழ்நாளெல்லாம் பசியறியாது போஷித்தவள்-
வறுமை வாட்டிடப் புலம்பி நிற்கும் தன் குழந்தைகள் கண்டு
வருந்தி அழுதாள் வா என்றே தரையில் விழுந்தழுதாள்.

கடலுக்கும், ஆற்றுக்கும் செல்லச் சிறிலங்கா இராணுவம்
தமிழ்-மீனவர்க்குத் தடை விதிக்க-
தோணிகளும், படகுகளும் தீ மிதிக்க-வறுமை
அலை மோதும் கண்ணீர்க் கடலானது வாழ்க்கை.

வறுமைக் கடலில் எதிர்நீச்சல் போடும் மீனவர்க்கு
விழிகளில் வற்றாத கண்ணீர் அலைகள்
வாழ்விலே பனையளவு சுனாமி அலைகள்-இவர்கள்
தடைதாண்டி கரையேறும் திருநாள் எந்நாளோ?

உழுது விதைத்து, அறுத்து களித்து,உண்டு சுவைத்து,
விருந்தோம்பிக் களித்து சுற்றம், சொந்தம் கூட்டி
பொங்கி மகிழ்ந்த நாட்கள்-பொய்யாய்
கனவாய் பழங்கதையாய் போன போர்காலம் இது

கழனிகள் அழிந்து, தோட்டங்கள் சிதைந்திட
களைகள் வளர்ந்து, கறையான் ஆக்கிரமித்திட
அடுப்பங்கரையிலோ உறக்கம் கலையாத பூனை,
வற்றிய முலையை கவ்வி பசியால் அழும் குழந்தை.

பஞ்சமும், பட்டினியும் வாழ்வாக
நாளெல்லாம் இறைவன் விதிக்காத நோன்பாக
வல்ல அல்லாவே எப்போது எம் நோன்புத் திருநாள்?
கண்ணீரில் சோகப்பயிர் செய்யும் உழவர் எமக்கு
கடவுளே எப்போது பொங்கல் திருநாள் ?

பனைகளைத் தறித்து, காப்பரண்கள் எழுந்திட
வானுயர்ந்த பனந்தோப்பெல்லாம் பாலையானது
வாழ்வளித்து பேணிக் காத்த தெய்வங்கள்
வாழ்விழந்து, வடிவிழந்து அலங்கோலமானது

பனைவெல்லமும், பாய்களும், பனங்கிழங்கும், நொங்கும்,
பனங்குட்டானும், ஒடியலும், பினாட்டும் ஈந்தே
எமக்கு உணவளித்த தெய்வம் உருக்குலைந்திட
கிழிந்த பாயில் முறிந்த பனை விசிறியோடு
பசி வயிற்றை கிள்ளப்-பரிதாபமாய் புலம்பும் நாம்
***பசியாறி பனம்பாயில் உறங்கும் திருநாள் எப்போது?***

தறிகளை முறித்து, நூல்கண்டுகளை எரித்து
வாழ்வாதாரத்தை அழித்திட,
ஆடையும், அரைவயிற்று கஞ்சியும் கனவாக
***இதயத் தறியோ ஓயாது சோகத்தை நெசவு செய்ய***
கோவனத்தோடு ஏழை நெசவாளிகள் நாம்-
புத்தாடையணிந்து
***கொண்டாட எம் புத்தாண்டு எப்போதோ?***

ஆடு மாடுகளும் கொள்ளைபோயிட
பாலும், தயிரும், நெய்யும் மணந்த வீடுகள் பாழ்பட
“அம்மா” என கன்றின் குரல் கேட்ட வீட்டில்
“அம்மா பசிக்குதே” எனும் பாலகனின் அழுகுரல்
பெற்றோரை வதைத்திட-***ஆயர் வீட்டை***
***ஆளும் சோகம் மாளும் திருநாள் எந்நாளோ?***

செக்குகளை முறித்து-செங்காளையை ஓட்டிச்சென்றிட
நல்லெண்ணை பூசி வாரி முடித்த
மதுமலர் கூந்தலும் வாடி மணந்திட,
செக்கினுள்ளே பூஞ்சணத்தின் ஆட்சி
எள்ளும், நல்ணெ்ணையும் மணந்த வீட்டில்
ஏழ்மையின் மாட்சி

மாடாய்ச் மனம் சோகச் செக்கிழுக்க- விழிகள்
எண்ணெய்யாய்க் கண்ணீர் வடிக்க,
எண்ணெய் பூசி வாரி முடித்து கூந்தலில்
பூச்சூடும் நன்நாள் எந்நாளோ?

வடக்கிலே முறிந்தபனை வாழ்விழந்த சோகக் கதை சொல்ல-
கிழக்கிலே கானம் மறந்த பாடும் மீன் உறவழிந்த கதை கூற-
உருக்குலைந்த ஊர்கள்
அகதிகளாய் உருவழிந்த தமிழினம்

எண்ணிட நெஞ்சை வருத்தும் சோகம்
கண்ணீர் சிந்தி
சிவந்தே சோகம் சொல்லும் விழிகள்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-06-05-23*

# பதவியும், பணி வாழ்வும்

இறை பணிக்காய்-தம்மை வெறுமையாக்கி, இறையடிமையான
வெள்ளைப் பாதிரிகள், நாடு, வீடு, நல்லுறவு துறந்து-கடல் கடந்து
கல்லூரி அமைத்து, சாதி மத பேதமின்றி கல்விக் கண் திறந்தார்
இருண்ட வாழ்வில் ஒளியேற்ற, இறுதி மூச்சிருக்கும் வரை-
தம்மைத் தீப, தூபமாய் இறைவனுக்கு அர்ப்பணித்தார்.

ஏழ்மை, பணிவு, கற்பு, ஏற்ற துறவுக்கு அணிகலனாக
இறை பணியாளனாய் சேவைகள்-இன்றோ
பணி செய்ய பதவி கேட்கும்-அரசியல்வாதிகள்!
அந்தோ பரிதாபம்.

ஒற்றுமையில்லாத் தமிழ் அரசியலில், களைகளாய்
கட்சிக் கொடிகள் நாளும் முளைக்க-ஈழத் தமிழர்
மத்தியில் எத்தனை பிரிவுகள்?

உச்சி மலை நின்று-இன்றும் உலகைக் காட்டி
ஆசையைத் தூண்டி, தெண்டனிட வேண்டும்-அலகையின்
“அதிகார” அரசியல் சோதனைகள்.

தமிழ் தேசியவாதத்தை வேதமாக்கிய, கட்சிகள் பலமிழக்க
ஏழைகளை நாடிச் சென்றவர் வெற்றி பெற, ஏற்க முடியாத
தோல்வியில்-ஏமாளி, மட்டக்களப்பான் தூற்றும்
தமிழ் தேசியமும், புலம்பெயர்ந்த தமிழர்களும்-வேடதாரிகளே

அரசியல் சூதாட்டத்தில், சூதாடி தர்மனும்-சகுனியும்
ஆடிய பகடை ஆட்டத்தில், ஆடை கலைந்த நிலைக்கு
ஆளான புதிய பாஞ்சாலியாய்த் தமிழ் தேசியம்?
புகலிடம் தேடும் அகதிகளாய்த் தமிழன்

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு-நம்மில் ஒற்றுமை நீங்கில்
அனைவருக்கும் தாழ்வு-நிதர்சனமாகியும்-
நிர்வாணம் கிட்டாத  தமிழர் அவலம்தான் என்னே!

ஏழை வாக்காளரை மதிக்காமல், எளியோர் துயர் துடைக்காமல்
பணிவாழ்வின் புனிதம் தெரியாத தமிழ் அரசியல்வாதிகள்-
தமிழ் தேசியத்தை தாரக மந்திரமாய் ஓதி, துண்டுப் பிரசுரங்களை
வெல்வோம் நாம் என்ற மமதையில வீடுகளில் வீசி எறிந்த அலங்கோலம்

பணிவாழ்விற்குப், பதவி, அதிகாரம் தேவையில்லை-அர்ப்பணிப்பு,
பணிவு, கருணையே தேவை, ஆணவம் கழித்தவனே தலைவன்
சீடர் பாதங்களைக் கழுவி, சிலுவையில் வாழ்வும், போதனையும்
ஒன்றெனக் கற்றுத்தந்தவரே மெய்யான குரு

சூரியன், வீடு, மீன், துவிச்சக்கரவண்டி, படகு, மொட்டு,
வீணை எனப் பறந்த பல வர்ணக்கொடிகள்-வாக்கைப் பிரித்து
சாயம் இழக்க,கண்ணீர் காயாத மண்ணில், இன்றும் ஒற்றுமைக்குப்
பஞ்சம்? யார் பெரியவன் என்னும் ஆணவ நெஞ்சம்

பிரிவினை வளர்த்த தமிழ் தலைவர்களும்-தம்முள் பிரிந்து
தமிழனைப் பிரித்ததில், சேர, சோழ, பாண்டியரை மிஞ்சியதில்
ஆச்சரியமில்லை, பாண்டவர், கௌரவராய் போராடி
தம்மைத் தாமே அழிப்பதில் வேற்றுமையில்லை

ஈழவர் கண்ணீரும்- செந்நீரும் ஓயாது என்பது
இன்றும் பொய்க்கவில்லை-ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு
இன ஒற்றுமையே நாம் வேண்டும் உன்னத உறவு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14.8.2023

# பரிசு

---

ஆயிரம் சாதிகள் இங்கே -நாம் நலிவுற்று அழிவுற
ஓயாத கட்சிப் பூசல்களுமிங்கே
ஒற்றுமையில்லாச் சாதி என்றே மற்றோர் நகைத்திட
எத்தனை வேற்றுமை ஈழத்தமிழர் நம்மிடை இங்கே

சீதனத் திருமணம்தான் இங்கே
சீதனமின்றி மஙகையர்
முது கன்னியராய் கருகுவதும் இங்கே

பலவர்ணக் கட்சிகள் சாட்சியம் பகிர
முத்தமிழர் ஒற்றுமைக்குப் பஞ்சம் இங்கே
இயக்க மோதல்களால் இன ஒற்றுமை சிதைதந்திட
ஆயுதப் போராட்டங்கள் இங்கே

எங்கு தொலைத்தார் ஈழத்தமிழர்
ஒற்றுமையை, இந்தியாவிலா,
லெமூரியாவிலா இந்து சமுத்திரத்திலா?

கண்டெடுத்தால் கூறுங்கள்-ஏழைப் பெற்றோரே
உங்கள் முது கன்னியருக்கு கணவர் வாங்கிட
காணி நிலத்தோடு பொன்னைப் பரிசளிப்பார்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-2-4.2023

# பசியும் பாவமும்.

---

கிழக்கு வானில் யுத்த மேகங்கள் சூழ்கொள்ள
யுத்தப் பேரிகைகள் ஆர்ப்பரித்து முழங்க
நிலவிழந்த வானாய் ஒளியிழந்து முகம் கறுக்கும் ஊர்கள்
நித்தம் கண்ணீர் தவமியற்றும் தாய்கள்.

காலன் உலாவந்து வாழ்வை அச்சுறுத்த
கண்ணி வெடிகள் பூகம்பமாய் பூமியை அதிரவைக்க
மாரி மழையாய் தொடரும் துப்பாக்கி வேட்டுக்கள்
காற்றில் கலந்து வரும் ஒப்பாரி, அழுகை ஒலிகள்

களையிழந்த பஸ் நிலையத்தில் மனவளர்ச்சி குன்றிய
பருவமங்கை, பச்சிலம் குழந்தையாய் பிச்சை கேட்க
பருவம் பூத்த உடலில் அழகின் பல அதிசயங்கள்
பல நாள் கந்தலில் காமனையும் சீண்டும் பீத்தல்கள்

புண் மொய்க்கும் கொசுவாய், மெய் மொய்க்கும்
காம விழிகள், பொய்யாய் பிச்சையிட்டு
மெய் தடவி காமம் கழிக்கும் வலிசல்கள்

இரந்துண்ண விட்டார் இழிந்த பெற்றோர் என்றே
என் மனம் துயர் கொள்ள, நாளும் இரந்துண்ணும் வாழ்வு
பஸ் நிலையமோ-ஏழை வாழும் வீடு

பஸ் நிலையத்தில் பாதி, இராணுவக் காவல் அரணாக
ஈரமில்லா இதயங்களில்- தம்மம் வாழமுடியாத நியதி
கொலை, களவு, வன்புணர்வும் யுத்த நீதி

விறைத்த குறிகளுக்கு விலை மகளும் கிடைக்காத பஞ்சத்தில்
மனநோயாளியையும் விட்டு வைப்பாரோ? மனம் நோகும் நியதி
கனத்த மனம் கடவுளை இறைஞ்ச, நொந்த மனம் விதியை சபிக்க
பசித்தவள் வயிற்றுப் பசி போக்க- மறைவாய் அழைத்தவர்கள்
தம் உடற் பசி போக்கினார், விறைத்த குறிகள் சூடு தணித்தே
விடியாத இராப்பொழுதுகளை நீட்டித்தார்

நடப்பது ஏதென அறியாமல், ஏமாந்த நங்கை
வயிற்றுப் பசி தீர்த்தவர்கள், காமப் பசிபோக்க
தன்னை ஈந்த அட்சய பாத்திரம், உதரத்தை
நிறைத்ததோ விறைத்த குறிகள் கழித்த சுக்கிலம்
கருவாகி உருவானதோ புத்திர பாக்கியம்

மாதங்கள் சில கழிய, மங்கை உடலில் மாற்றங்கள் தெரிய
தாய்மை சொல்லும் உதரம், தன்னை வெளிக் காட்ட
வாய்மை மறந்த நெஞ்சங்கள், வஞ்சகமாய் சிரிக்க
அழுக்கு கந்தலும், சிக்கு முடியுமாய் -சிரித்துச் சிரித்து
பசிக்காய் கை ஏந்தும் தாய்.

அம்மா பசிக்குது- தாயின் சத்தம் விண்ணை முட்டிட-
காதுகளை பொத்தி கல்லாய், சிலையாய் போன கடவுள்கள்
காமத்தை துாண்ட வயாக்கிரா மாத்திரை தேடும் செல்வர்கள்

லிங்கம் தாங்கிடும் யோனி பூஜிக்க சாமியா?
பசியும் பாவமா? காமப் பசியும்
மானுடத்திற்கு வரமா? சாபமா?

பைத்தியம் கருவுற்றாள்-துயர் துடைக்க
பைத்தியங்கள் வாழும் உலகில் -வைத்தியனாய்
யாருமில்லை, எல்லாம் பைத்தியமே-
நானும் பைத்தியமே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-27-06-2023

# பாதை மாறிய பயணம்

---

வீரத்தோடு நடைபோடும் மறவர் மானம்
வீழ்ந்தாலும் மீண்டும் எழத்துடிக்கும் தமிழன் வீரம்
மண்டியிட்டு வாழுமோ?, வணங்கா முடியாய்
மண்ணிற்காய் போரிட்டு மடியுமோ?

ஓரினத்தின் போராளி, எதிர் இனத்தின் பயங்கரவாதி
ஆயுதப் போராட்டத்தின் மாறாத விதி
சிந்திடும் இரத்தமோ, சிவப்பு-தாய்க்குலத்தின்
கண்ணீரிலோ துவர்ப்பு, உண்மையோ மாறாத கசப்பு

சாம்ராட் அசோகனும்-தர்ம அசோகனாய்
மனம் மாறிய வரலாறு பழங்கதையானது
கோர யுத்தங்களும், கொடிய பயங்கரவாதமும்
தொடர் கதையானது, அமைதி வான் நிலவானது

கொலை, குருதியால் வரலாறுகள் எழுதப்பட
மானுடம் போல் ஓர் கொடிய விலங்கில்லை
யுத்த வெறி காட்டு விலங்குகளுக்கில்லை
அமைதிப் புறாவிற்கு உலகில் இல்லிடமில்லை

அமைதிப் பாதையில் தர்மத்தின் கீதம்
அகிம்சையோ மகாத்மாக்களின் வேதம்
வன்முறைப் பாதையில் காயாத குருதி வெள்ளம்
தாய்களின், விதவைகளின் ஓயாத கண்ணீர் ஓலம்.

மனுநீதிச் சோழனின் மணிக்கயிறோ தூக்குக் கயிறான துயரம்
நீதித்தராசை கள்ளத் தராசாய் மாற்றிய பயங்கரவாதம்
இனவாதச் சேற்றில் புதையுண்ட தர்மச் சக்கரம்
கல்லாய், சிலையாய் மாறிட்ட கடவுளோ தெய்வம்?

வாழ்ந்தால் தமிழ் ஈழம்-வீழ்ந்தால் வீர சொர்க்கம்
முப்பதாண்டு கால விடுதலைப் போராட்டம்,
முடிவில் எல்லாம் கானல் நீரான அவலம்
முடியாத கண்ணீர்த் தவத்தில் தாய்க்குலம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-7-6-2023*

# பாதி முல்லை

---

பள்ளிச் சீருடையிலும் பாலியல் வன்முறைக்குப்
பலியான இரத்தகறைகள்:-கடற்படையின்
வெள்ளைச் சீருடையிலும் காமத்தின் பாவக்கறைகள்.

பள்ளி சென்ற பாதிமுல்லையும்- கடற்படையின்
வல்லாங்கால் பரிதவிக்க புழுதியில் கிடந்தது-
பாடித்திரிந்த வானம்பாடியும்-உயிர்துடிக்க
பருந்துகளின் வல்லுறவால் பாதையில் விழுந்தது

கசக்கி முகர்ந்த ரோஜாமொட்டு கண்ணீரில் மிதக்க,
அடக்கி ஆளும் ஆயுதவர்க்கத்தின் விறைத்த குறிகளோ
புதிய யோனிகளை குறிபார்க்க
காமப் பேய்களாய் அலையும் சிங்கள இராணுவம்
தாய்குலமே கவனம் தங்கச்சிறுமிகளே அதிகவனம்

இங்கு வேலிகளே பயிர்களை மேய்ந்த அவலம்
வெருளிகளே-வல்லூறுகளாய் மாறி
குஞ்சுகளை சீரழித்த துயரம்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-29.3.2023

# பிந்துனு வெவ

யுத்த வெப்பத்தால் மலர்களே முட்களாயிட
அரச பயங்கரவாதத்தின் உச்சத்தில்
அப்பாவிகளே துப்பாக்கியேந்தினர்

பேரினவாதத்தால் வாழ்விழந்தவர் போராளியானார்
அராஜகத்தால் கைதியானவர்கள்-அரச
பயங்கரவாதத்தால் காணாமற்போனார்

வெள்ளாடுகளுக்கு வேங்கையின் குறியிட்டுச் சிறைகள்
புள்ளடியிட்ட புலிகளை பூமியில் நின்று ஒழித்திட
புனர் வாழ்வு முகாம்களோ- யமபுரிகள்

மூடுபனிபோல் பச்சை மலையை மூடியதோ பேரச்சம்
கங்கையாய் பிந்துனுவெவ முகாமில் ஓடியதோ
அப்பாவித் தமிழர் இரத்தம்

வேலியே பயிர்களை மேய்ந்த விபரீதம்
காவல் நாய்களே செம்மறியாடுகளை
கடித்துக் குதறிய கொடும் பாதகம்

காவற் சம்மனசுகளின் வேடங்களில்- காலனின் தூதர்கள்
புனர் வாழ்வு முகாம்களிலோ கொடிய அசுர யாகங்கள்

பச்சை மலையெங்கும் உச்சி வகிடாய் ஓடிய இரத்தம்
பனிப்புகாராய்-மலையகத்தை மூடியதோ
எரியும் தமிழ் உடலங்களின் புகை மூட்டம்

அசுர யாகத்தில்-அப்பாவித் தமிழர் ஆகுதியாக
இனவாத மந்திரம் ஓதிய-
பிரகஸ்பதிகளோ சிங்கள அரசியல்வாதிகள்

வெந்நீரில், செந்நீர் சிந்தும் தேயிலையும்
கண்ணீர் மல்கிடச் சொன்னது இது என் இரத்தமல்ல-
மலையகத் தமிழன் இரத்தம்.
வெலிக்கடை, பூஸா, களுத்துறை சிறைகளில்
ஓடிய இரத்தமும் சொல்லியது-இது
பிந்துனுவெவ படுகொலையின் இள இரத்தம்
ஈழத்தமிழன் மண்ணுக்கீயும் விடுதலை முத்தம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

*Pax Ravichandra-2-4.2023*

# தைப் பொங்கல்



பொங்கிப் பூரிக்க-நெஞ்சில் அமைதியில்லை
பொங்கி மகிழ அரிசியோ, பாலோ இல்லை
அடிவயிற்றில் நெருப்பெரிய-அடுப்பங்கரையில்
பூனை உறங்கத் தொடரும் அவலநிலை

கைமை பூண்ட மங்கையர் வாழ்வோ சோகக்காடு
காணாமற்போன பிள்ளைகளுக்காய் தவமிருக்கும்
அன்னையர் வாழ்வோ கண்ணீர் மழைக் காடு
பேரினவாத அரசின் நீதியோ வெட்கக்கேடு

பல்லாண்டு கடந்தும் அரசியல் கைதிகளுக்கு
விடுதலை, சட்டத்தில் அநீதியானது-அங்கவீனர்
விதவை, அகதிகளுக்கு விடிவில்லை
ஆண்ட பரம்பரைக்கு ஆளும் உரிமையில்லை

பொங்கிய மறவர் மார்புகளை குண்டுகள் துளைத்திட
வேங்கையெனப் போராடிய வீரம் விழுந்தது
கங்கையெனப் பாய்ந்த குருதி, கண்ணீர் வெள்ளத்தில்
மங்கையர் மூழ்கிட கரையோ வெகுதூரம் போனது

காமன் கணைபட்டு புண்பட்ட கன்னியர்
சேல் விழியாள் கடைக் கண்பட்டு காதல்
வலைப்பட்ட காளையர்-இரு மனங்கள் இணைந்த
திருமணத்தை சிதைத்த கோர யுத்தம்

உரிமைக்காய்ப் போராடி மண்ணில் வீழ்ந்த
புலியினமோ தமிழினம்-கங்கையாய் ஓடிய
குருதி, கண்ணீர் மண்ணில் கலந்திட-ஈழ
மண்ணில் இன்றும் மாறாத் தமிழ் மணம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-08-2023

# போர்க்கால மேகங்கள்

ஓதிடும் வேதம் உண்மை பிறழ்ந்திட, மதங்கள் சாரமற்ற
உப்பாய் மாறிட, விடுதலைப் போராளிகளும் விகாரமடைந்து
அரக்கர்களாய் மாறிட-உலகெங்கும் வன்முறை வேதம்-
மதப் பயங்கரவாதம், ஓயாத அழுகை ஒப்பாரிச் சத்தம்

கோவலனை இழந்த கண்ணகி, மாதவியாய் மாறிட-
மனுநீதிச் சோழனின் ஆராய்ச்சி மணிக்கயிறு அறுந்து-நீதி
நெறி பிறழ்ந்திட, கழனிகளை கால்நடைகள் மேயக்- புகலிடம்
தேடும் அகதிகள், அலைகள் கரையொதுக்கும் பிணங்கள்

நீலக்கடலும் நிறம்மாறிட-குருதிச்சிவப்பு-நீலவானிலும்
புகை சேர வானும் கறுப்பு, கண்ணீரும், குருதியும்
கலந்த வாழ்வோ கசப்பு, ஊர் எரிய- வானுயரும்
கரும்புகை,  உறவெரிய வளர்ந்திடும் பெரும் பகை

ஓயாது அழுது ஆலயமணி அகால மரணம் சொல்ல
அலறி ஓடும் அம்புலன்ஸ் வண்டிகளும், துப்பாக்கிச் சத்தங்களும்
காயாத குருதியும்-ஆறாத காயமும் அமைதியைப் பழிக்க-
ஆண்டவனை அவசரமாய்த் தேடும் மானுடம்.

போதியின் நிழலில் புத்த பெருமான் அமைதியில் ஆனந்தம் காண
சிலுவை மரத்தில்-கிறிஸ்து பெருமான் பெரும் துயரத்தில் வாட
குருஷேத்திர பூமியில் ஒலிக்கும் கிருஷ்ணனின் வேனுகானம்.

மண்ணில், புதிய சிலுவைகள் முளைக்க-மயானத்தில் அணையாத நெருப்பு
தொடர்ந்தெரிய, மண்ணாகி, நீறாகி மடியும் வாழ்வில் இனவாதம்,
மதவாதம், மானுடத்தின் ஆணிவேரை அசைக்க -களைப்பாற
மரம் தேடும் அமைதிப்புறாக்கள், அச்சுறத்தும் கழுமரங்களோ எங்கும்

நீறணிந்த நெற்றி-சிலுவையணிந்த நெஞ்சம்
தொப்பியணிந்த தலைகள், பிரித்நூலணிந்த கரங்கள்
ஓதிய மதங்கள்- சாரமற்ற உப்பானதோ?
உலகெங்கும் யுத்தங்கள், கங்கையாய் பாயும் இரத்தங்கள்
பெருமான் புத்தரும் வெறும் கற்சிலைதானோ?
மரித்த இயேசுவும் உயிர்த்தார் மதக்கற்பனைதானோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-14.8.2023*

# போரும் அமைதியும்

---

அமைதிப் பேச்சு ஆட்டடங் கண்டிட-மதுபோதையும்,
மாதர் அணைப்பும், உடலையும், மனதையும் சூடேற்றிட
மெழுகுதிரி வெளிச்சமும், மேற்கத்திய இசையும்
போதையைக் கூட்டிட-ஐந்து நட்சத்திர ஓட்டல்களில்
அரசியல் தலைவர்களின் அலங்கோல நடனங்கள்

குப்பி வெளிச்சம் இருளைப் பழித்திட
ஒட்டிய வயிறும் உறங்காத விழிகளும்
சோகத்தைச் சொல்லிட -கொட்டில்களில்
குப்பைகளாய் குந்திக் கிடந்த தமிழ் அகதிகள்

உயிரிழந்த உறவுகளின் உடலங்களை வாங்கிட
பிணவறை வாயிலில் நடைப்பிணங்களின் வரிசை
உருவழிந்த உறவுகளின் நெஞ்சினிலோ
சோகத்தின் நெரிசல்

இனத்துவேஷ முழக்கங்களால் ஆட்சி மாற்றங்கள்
வெடிகுண்டுகளின் ஓசையால் புரட்சி கோஷங்கள்.

பால் வற்றிய மார்பில்-பசியோடு
விரல் சூப்பி உறங்கும் பச்சிலம் குழந்தைகள்
நீர் வற்றிய விழிகளில்-கண்ணுறங்காத
விதவைத் தாய்களின் துயரங்கள்

ஏழைகளின் கூனல் முதுகில் யுத்த வரிச்சுமைகள்
அரசியல்வாதிகளின் தொப்பைகளிலோ
மின்னிடும் தங்க வைர நகைகள்

புகுந்த ரவைகளும் வீழ்த்திய உடலில்
புரட்சியின் ஆணிவேரைத் தேடிக் களைத்திட
வீழ்ந்த உடல்களும் முளைத்து எழுந்தன
விடுதலையின் ஒளியை நாடி

பேச்சு வார்த்தை முறிந்துபோயிட-குண்டு மழைக்கஞ்சி
வெள்ளைபுறா பறந்து போனது, குருதி மழையில் நனைந்து
வெள்ளைத் தாமரை வாடிப்போனது. ஆயுதங்களின்
பரிபாஷையில் அமைதிப் பேச்சுவார்த்தைகள்-அழிவுப் பாதையில்-
அரசியல் தலைவர்களின் இனத்துவேஷ யாத்திரைகள்

துப்பாக்கிகளின் வெப்பக் காற்றில்
துடித்து வீழும் மனித உயிர்கள்
அப்பாவிகளின் இரத்த கண்ணீரில்
கரைந்து மறையும் ஆனந்தப் புன்னகைகள்

‘‘வெள்ளை வானில்’’ உலாவரும்
‘‘சிங்கள யமன்’’
வீதிகளில் காணமற்போகும் தமிழ் மகன்

பிள்ளைப் பாசத்தால் பிடி கடுகு பிச்சை கேட்கும்
கீஸ கௌதமி-பிரித் ஓதல்களால்-
எழுச்சிபெறும் மரணப் படையணி

தம்மம் மொழிந்த ததாகதர் அமைதியாக
பற்றறுத்தவர் தர்மசக்கரத்தில்
பற்றியெரியும் இனதவாதத் தீ
தேசமெங்கும் யுத்தத் தீ

முப்படைகளின் அணிவகுப்பில் இனவாதிகளின்
விழாக்கோலம்-காணமல் ஆக்கப் பட்டவர்களுக்காய்
கண்ணீர்த் தவமிருக்கும் உறவுகளின் மாறாத அவலம்

தர்மச் சக்கரத்தில் புத்தர் பெருமானின் புனிதவேதம்
எரியும் டயரிலோ இராணுவத்தின் அசுர யாகம்.

இங்கே தீயும் கூடக் காவியுடுத்தது
தீக்கிரையாகும் தமிழர் துயரத்தால்
காவி கூட வெளிறிப்போனது-பிக்குகள்
கக்கிய இனவெறிக் கோஷத்தால்

புத்த தர்மமம் மௌனத்தல் மூழ்கிட
சங்கம் சத்தமாய் -சமவுரிமையை எதிர்த்து
யுத்தபேரிகை முழங்கியது

விகாரையிலும் குண்டுகளின் புகைமண்டலம்
தேவதத்தனின் யாகத்தில், செம்மறியாடுகளின் அவல ஓலம்

மண்டையோட்டு மண மாலைகள் மாற்றி
ஒலிவ இலைகளில்-சமைத்த வெண்புறாவின்
இறைச்சி விருந்தாக, போருக்கும் அமைதிக்கும்
பொருத்தம் பார்க்காத கல்யாணம்

அங்கவீனத் திருச்சபைகளில் ஓயாத
சாவுமணியோசைகள்
அன்னையர் அடிவயிற்றினிலோ
அணையாத சோகச் சுடலைகள்

வெள்ளரசை சுற்றித் தங்க வேலி
கிளைகள் தலை சாய்க தங்க முலாமிட்ட தூண்கள்
தமிழர் வாழிடமோ திறந்த சிறைகூடம்
இறையாண்மை கொண்ட மக்களோ
இங்கோ அடிமைகள்-
கடல் கடந்த தேசத்தில் அகதிகள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-2-4.2023

# போரும், பெயரும், புகழும்

இடிந்த இல்லங்களும், எரிந்த ஊர்களும், காடு மண்டிய கழனிகளும்,
முறிந்த பனை, தென்னந்தோப்புகளும்-யுத்த பூமியின்
ஆறாத காயங்களாக, தமிழ் ஈழம் கலைந்த கனவானது,
விடுதலைப் போராட்டம் தோற்று மடிந்த கதையானது

அழுகையும், மரண ஓலங்களும் அமைதியைப் பழிக்க
கைதியும், அகதியுமாய் அப்பாவிகளின் வாழ்க்கை சிதைய
அகதிக்கு-கந்தையும், கூழும் எட்டாத நிலவானது
புகலிடம் தேடும் வாழ்வோ அவலக் கதையானது

தேசியக்கொடியிலும்- புலிக்கொடியிலும் வெறி கொண்ட
சிங்கம், புலி உலாவிட, தம்ம சக்கரமும் குருதிச்சேற்றில் புதைந்திட
வெற்றி ஆர்ப்பரிப்பில் பேரினவாதம், வீழ்ந்த சிங்கள, தமிழ்
வீரர்களின் மனைவிகளோ விதவைகளான அவலம்

கட்டப்பனுக்கு தூக்கும்-எட்டப்பர்களுக்கு
அமைச்சு பதவியும்-சாணக்கியமும்
பஞ்சதந்திரமும் கலந்த இராஜதந்திரமானது
தமிழனுக்கு தமிழ் தேசிய கீதமும் தடையானது

சிங்களும், செஞ்சீனமும் நாடாள-செந்தமிழன்
சேர, சோழ, பாண்டியராய் தம்மிடையே போராட
மூவேந்தர் பரம்பரைதான் தமிழன் பரம்பரை-
ஈழத்திலும் உறுதியானது.

தமிழன் என்று சொல்லடா, தலை நிமிர்ந்து நில்லடா
வெறும் கூப்பாடும், கோஷமுமானது.
ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு, நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வு-
நிதரிசனமானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14.8.2023

## போர்

---

வெஞ்சினம் பூண்டெழுந்த அஞ்சாத் தமிழினம்
வீழ்ந்து பணிவதோ இல்லை விழுப்புண் தாங்கி மடிவதோ?
தொழுது வாழ்ந்ததால் அடிமையானோம்-நெஞ்சை
நிமிர்த்தி உரிமை கேட்டதால் போராளிகளானோம்
மாள்வது ஒருமுறை வீரர்தம் வாழ்வில்-புலியே
வெஞ்சினம் மூளப் போராட எழுந்து வா

ஆண்ட பரம்பரை தம் ஆளுமுரிமை பெறும்வரை
அடிமை வாழ்வுக்குச் சாவுமணியடித்து
உரிமை வாழ்வுக்காய்
சுதந்திரப் போர்தொடுப்போம்

## எம் கதை

---

காரிருள் போர்த்த அமாவாசை இரவில்
சீருடை இராணுவத்தின் கொடுஞ்செயலில்
ஊரும் உறவுகளும் தீக்குளித்திட,
உடல் மண்ணிற்கு, உயிர் தமிழிற்கு
மடியும் வரை போராடுவோம்
வெஞ்சினம் பூத்த நெஞ்சோடு வீர சபதம் பூண்டு
காடும், கடலும் கடந்து சென்ற இளைஞர் நாம்

இன்று
கனல் கக்கும் எரிமலைகளாய்
விடம் சூடி களமாடும் வேங்கைகளாய்
விண்முட்ட வீரநாதம் எழுப்பி போராடுகின்றோம்
தமிழ் ஈழத் தாயகத்திற்காய்

**என்று தணியும் எங்கள் சுதந்திரதாகம்**
**என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4.-4-2023

# போர்ப் பறை



இரத்தங்கள் காயவில்லை-யுத்தத்தின்
கொடூர சத்தங்கள் ஓயவில்லை
தீயும், புகையும் அணையவில்லை
புலம்பலும், ஒப்பாரியும் மறையவில்லை

ஏற்றிய வெற்றிக் கொடிகளில்-இரத்தக் கறைகள்
நூற்ற கொடிக்கயிற்றில்-அறுந்த தாலிக் கொடிகள்
வெள்ளி அரைஞான் கயிறுகள்

ஒலிக்கும் போர்ப்பறையை மீறி ஒலிக்கும் ஒப்பாரி
-வெடிக்கும் குண்டுத் தீயில் வெந்து கருகும் உடலங்கள்
எரிந்து புகையும் ஊர் மனைகள்

மண் அதிர, விண் அதிர, மலை அதிர, கடல் அதிர
மழையெனப் பெய்யும் குண்டு மழை
கண்ணீர்க் கடலில் நீந்தும் சேல்விழிகள்

மின்னலாய் மின்னி, இடியாய் முழங்கி
மழையெனப் பொழியும் தீமழை
தீ விதைத்து, தீமையை அறுவடைசெய்திட
தீ மிதித்துப் போராடும் மறவர் படை

எரியும் தீயில் ஊரும், உயிர்களும் கருகிட
உதிரமும், கண்ணீரும் பெருகிட
தாலி அறுந்து, குங்குமம் கலையும்
விண்ணை முட்டும் தாய் குலத்தின் ஒப்பாரி

அநாதை, விதவை, அங்கவீனர், அகதி என
சாதியம் கடந்து தோன்றும் ஜாதி, வலிந்து காணாமல்
ஆக்கப்பட்டவருக்காய் கண்ணீர்த் தவமிருக்கும்
தாய்மைக்கு எங்கே நீதி?

அடையாளமின்றி மறைந்த புதைகுழிகள்
எரியும் டயர்களோ சிதைகள்-யுத்தத்தில்
கொலையும் நீதி என்ற இழி நிலைகள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-08-2023

# புகலிடம்

---

கம்பத்தில் உயரப் பறக்கும் சிங்கக் கொடியிலும்
ஈழத்தமிழனின் இரத்தக் கறைகள்.
இனவாதம் துப்பிடும் சீவர ஆடையிலும்
தமிழனின் குருதிக் கறைகள்

புகலிடம் மறுக்கும் கரைகளில்
நீலக்கடலே அகதிகளின் இருப்பிடம்
வாழிடம் தேடிடும் பயணத்தில்-மானுடம்
கடத்தல் சரக்காய் மாறிய துயரம்

அகதிகளை கரை இறங்கிட
அனுமதி மறுக்கும் அரசுகளுக்கு-ஆறுதல் அளித்திட
பிணங்களாய் கரை ஒதுங்கும் அகதிகள்

கரை மறுக்கும் கடலகளில் -கண்ணீரோடு
புகலிடம் தேடிடம் அகதிகள்
விலையில்லாத மனித உயிர்களோடு
விளையாடிடும் வியாபார அரசியல் நிலைகள்

உயிரிழந்து பிணங்களாய்-கரை ஒதுங்கும் அகதிகள்
உறவிழந்து அநாதைகளாய்-கடலிலும்
கண்ணீரிலும் தத்தளிக்கும் உறவுகள்.

அலைகளும் கரை தொடலாம்-வானத்துப் பறவைகளும்
கானகத்து விலங்குகளும்- குளிர் காலத்தில் இடம்பெயரலாம்
உரிமையிழந்து ஒடுக்கப்பட்ட மானுடம் உயிர் பிழைத்திட
புகலிடம் தேடும்போது-கரை ஒதுங்கத் தடைகள்

புகலிடம் மறுக்கும் கரைகளில்-கப்பலே வாழிடமாகும்
உறைவிடம் தேடிடும் அகதிவாழ்வில்-மானுடம்-
விலங்கிலும் இழிந்த நிலைகாளான பாவம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-31.3.2023*

# புகலிடம் தேடிடும் தமிழ் அகதிகள்

---

வான் நிலவும் தேய்ந்தழ-வசந்தகாலத் தென்றல்
புயலாய்க் குமுறியெழ, கடலும் கரைமுட்டி அழுதது-
கார் மேகம் சூழ்நதிட, கருவானும் நீர் சிந்திக் கரைந்தது

புகலிடம் தேடிடும் அவலப் பயணத்தில்-
வாழிடமிழந்த அகதிகளோ மலிவுச்சரக்கு
தாயகமோ சுடுகாடாகத்-தப்பி வந்த
இடைத்தங்கல் முகாமோ எரி நரகு

கானகமும் கடலும் சரணாலயங்களாக
முட்டி நிற்கும் கண்ணீருக்குள் எட்டிப்பார்க்கும் சோகம்
ஏழ்கடலிலும் ஆழம்-கட்டிய தாலியும் கர்ப்பமும்
சுமைதாங்கியையும் சாய்திடும் பாரம்

வேரறுந்த மரங்களாய் வீழ்ந்திட்ட உறவுகளும்
தீயுண்டு கரியான ஊர் மனைகளும்
பேயுலவும் சுடகாடாய்ப் போன தாயகத்தின்
புதைபொருள் எச்சங்களாய் புதைந்த அவலம்

கரியான உறவுகளைச் சுற்றி நின்று
நாய்களும் நரிகளும்  ஊளையிட்டு கரையும்
காணாத உறவுகளைத் தேடி
தாய் பசுவும் பால் மடி கனத்திட கதறும்

நீலக் கடலிலும், நெஞ்சினலைகளிலும் சோகச் சுனாமி
அலைமோதும்- ஏழு சுவரங்களும் ஒன்றாய்க் கூடி
இசைத்திட "யாழில்" ஓயாத முகாரி-
"மீன் பாடும் தேன்நாட்டில்" பாடும் மீன்களின் ஒப்பாரி

விழிகளிலோ கண்ணீர் மழை, விம்மிடும்
நெஞ்சங்களிலோ புகைந்திடும் எரிமலை
விழி மொய்க்கும் திசையெங்கும் தீயுண்ட உடலங்கள்
வழி தெரியாத திசையினிலோ அகதிகளின் பயணங்கள்.

அலை எழாத நடுக்கடலில் சோகச் சுனாமியால் சுருண்ட மனங்கள்
நீர் புகாத கப்பலுக்குள் கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கிடும் நடைப்பிணங்கள்.
நாடிடும் நாடு நல்கிடுமோ புகலிடம்-ஓயாத கவலை உயிரை வாட்டிட
புகலிடம் தேடிடும் அவலப் பயணமும்-புயலில் சிக்கிய சிறு படகாகும்.

உணவும் நீரும் ஓயாத குறையாக
உறவின் பிரிவு மறையாத கறையாக
கரையும் கண்ணீரில் காயங்கள் பலியாக-எரியும்
சிதைகளில் ‘‘தமிழ் ஈழக் கனவும்’’ கரியானதோ?.

மூடிய அறைகளும் சிறையாக மூச்சு பெருமூச்சாகும்
வாடிய நெஞ்சம் சுமையாக தேடிடும் அமைதி பகல் கனவாகும்
பசியும் நோயும் வாட்டிடும் தேகம் பாரச்சுமையாக
மரணம் மாபெரும் கொடையாய்த் தோன்றும்

காயும் பால் நிலவை இரசிக்க கண்களிலோ நீர்த்திரை
கரை தெரியாத நீர்த்திரளை இரசிக்க நெஞ்சினிலோ சோக அணை
பூவும் மஞ்சளும் பொய்யான வாழ்வில்-அலையும் நிலவும்
வானில் புகலிடம் தேடும் அகதியாய்த் தோன்றும்
கண்ணில் தெரியும் கடலும்-முன் சென்ற
அகதிகள் வடித்த கண்ணீராய்த் தெரியும்.

விடியாத இரவுகளாய் நாட்கள் -வடியாத வெள்ளமாய்ச் சோகம்
மிதக்கும் சிறைக்குள் துளிர்க்கும் நம்பிக்கைகள்
மூழ்குமோ மடியுமோவெனத் தொக்கி நிற்க
தடுப்பு முகாம்களில் உருக்குலையும் உறவுகளின் கதறல்கள்
கடலையும் காற்றையும் நிலைகுலைய வைக்கும்

எந்தையும் தாயும் வாழ்ந்த வளமான தேசம்
சிதையில் எரிந்து சிந்தையில் மாறக் கரியானது
கந்தையும் பட்டாகி கூழும் அமுதாகி
நெஞ்சை குளிர்வித்த காலம்
கனவாய்ப் பழங்கதையாய் போனது.

ஆடிப்பாடி மகிழ்ந்த காலம் கனவானது
கோடித் துயரை சிலுவையாய் சுமக்கும் காலம் சாபமானது
தேடிச் செல்லும் வழியோ கல்வாரிப்பாதையானது
தாயகமொன்றே ‘‘மீட்பிற்கு’’ விடையென்பது தெளிவானது.

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

*Pax Ravichandra-29.3.2023*

# புன்னகைப் பூ

---

புன்னகைப் பூவை
புழு அரித்த துயரமிங்கே-தமிழ்
அன்னையின் வீரப்புதல்வனை
சிங்கள நரிகள் வீழ்த்திய கொடுமையுமிங்கே.

குண்டு வீச்சு விமானங்களால்
தமிழ்ச் செல்வனுக்கு குழி பறித்தார்
அஞ்சி நடுங்கும் பேடிகள்
வீரம் கொஞ்சிடும் வேங்கையின் மார்பில்
வானில் நின்று குறிவைத்தார்

தமிழன்னையின் விழிகளிலோ நீர்க்கோலம்
தரணி வாழ் தமிழர் நெஞ்சங்களிலோ கார்காலம்
ஈழமண்ணில் இன்றோர் வீரவிதைப்பு
ஈழத்தமிழர் நெஞ்சினிலோ கொதிப்பு
அடிமைத்தளையுடைக்க புதுப்படையெடுப்பு.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4.-4-2023

# புரட்சிக் கவிஞன்

---

கட்டபொம்மன் கர்ச்சனையும், வீரமும் பழங்கதையாகிட
விடியலுக்காய் கூவிய புரட்சிக் கவிஞன் பாரதியும்
உறங்கும் எரிமலையாய் மாறிட-பூக்களையும்,
பூவையரையும், காதலையும்- நடிகர்களையும் போற்றிப்
பாடும் சில்லறை கவிஞர்கள் கவியரசர்களாய் மாறிட
மீன் சந்தையில் பூவிற்கும் கதையாய் காலம்

அடிமை நுகம் தகர்ந்திட, தினம் அனல் துப்பி
நெருப்பாற்றில் நீராடும் எம்மவர் வீரத்தை
புதிய கலிங்கத்துப்பரணியாய் பாடிட
வா செயங்கொண்டா-ஜெயம் கொண்டு வா

எட்டுத் திக்கிலும் எரிமலை வெடிக்க,
எட்டாத வானும், ஏழ் கடலும் -தீப்பற்றி எரிய
போராடி வீழ்ந்தவரும், தகனப் பலியானவரும்
விடமாலை சூடி, வெறி கொண்டு மனித வெடிகுண்டாய்
எதிரியை வதஞ் செய்த மறவர்களோ பல்லாயிரம்

இந்துவும், பாக்கு நீரிணையும், நம்மவர் குருதியால் சிவந்திட
சிந்து பாடிச் சீறி எழுந்த இனம் சிங்களத்தோடு பொருதி
தம் ஆளுமுரிமைக்காய் போராட-வல்லினப் புலிகளைப்
பாடாமல் பூவையர் இடையினத்தை பாடும்
மெல்லினக் கவிஞன் நமக்கெதற்கு?

அஞ்சி வாழ்ந்த காலமும், அடக்கியாண்ட காலமும் மறைந்திட
நடுக்கம் களைந்து நங்கையரும் வீர மறத்திகளாய்
சீறும் காளியாய்-துர்க்கையாய் உருமாறிப்
போராடிக், குருதியில் நீராடி மகிழ்ந்திட
நம்மினத்தை நாம் பாடாமல் யார் பாடுவார்?-தமிழா
நம் இழப்பிற்கு நாம் அழாமல் யார் அழுவார் புலம்புவார்?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28-06-2023*